# என்னவோ தோணித்து

'ஸோனல்'



உலகத்திலுள்ள கடுகடுப்புகளெல்லாம் சாரநாத்தின் முகத்தில் [illegible] தாராளமே குடியிருந்தன. வெறும் [illegible] உடன் ஏன் படிப்பை நிறுத்திஜேம். [illegible] கல்யாணம் ஏன் செய்து கொண்டோம். அப்பாவை ஏன் முறைத்துக் கொண்டோம் என்றெல்லாம் அடிக்கடி நினைத்ததன் விளைவாக பேசாமையில் படர்ந்திருந்த பழிக்கப்படாத அவனது இளம் [illegible] முடியில் சமீபகாலமாக நரையின் அளவு [illegible] கூடத் தொடங்கியிருந்தது.

மூன்று நாள் கழித்து வரப்போவதாகப் பொங்கல் பண்டிகை பய முறுத்தியது. 'மார்கழி மாசம், சூனிய மாசம், தை பிறந்ததும் காலி பண்ணிடறேன்' என்று வீட்டுக்காரனிடம் வாடகை பாக்கிக்குச் சால்ஜாப்பு சொல்ல மார்கழி செளகரியமளித்துக் கொண்டிருந்தது. அதுவும் டாட்டா காட்டிவிட்டுப் போகிறது மூன்று நாளில்.

பொங்கல் பொங்குகிறதோ இல்லையோ, வீட்டுக்காரன் வந்து பொங்கப் போகிறன். கேவலம் ஒரு முப்பது ரூபாய் வாடகை தரமுடியாமல் எத்தனை அவமானம். மற்றக் குடித்தனக்காரர்கள் ''ஒற்றை ரூம் குடித்தனம் தானே? அதோ அந்தப் போர்ஷன்!'' என்று மனைவியைக் கடன்காரர்களுக்குக் காட்டிக் கொடுத்துக் கொண்டிருப்பார்களே, அவள் எப்படிச் சமாளிப்பாளோ என்றுதான் அவன் எப்போதும் காரியாலய விஷயமாக அலையும் போது நினைத்துக்கொள்வான். பெருமூச்சு விடுவான்.

''போஸ்ட் ரயில் இஞ்சின்! உனக்கு மணியார்டர் அய்யா,'' வளப்பமான ஹெட் கிளார்க் அவனிடம் கூறினர்.

அதிசயமும், ஆச்சரியமுமாக, வெளியிலிருந்து வந்த களைப்பெல்லாம் படபடப்பாக மாற, ''எனக்கு இருக்காது,'' என்றான், இருக்கக்கூடாதா என்ற சபலத்துடன்.

மணியார்டர் அவனுக்குதான். [illegible] வதனாவின் அண்ணன், [illegible] [illegible] முப்பது [illegible]

காரணங்களுடன். என்னவோ தோன்றிற்றாம். [illegible] அட்டையில் அதற்குமேல் விவரித்து எழுத அதனுக்கு இடமில்லை.

மூவாயிரம் ரூபாய் கிடைத்த மகிழ்ச்சியுடன் மனைவியிடம் இரவு சாவகாசமாகப் படுக்கை அறையில் பணத்தை எடுத்துத் தந்தான்.

''உங்க அண்ணனுக்கு என்னவோ தோணித்தாம். அவனுக்கும் பாவம் கஷ்டம்தான். நீ ஏதாவது அனுப்பச் சொல்லி எழுதினயா என்ன?''

''நான் ஏன் எழுதறேன்? அவனுக அனுப்பியிருக்கிறன். கனுச் சீர்னு உடன் பிறந்தவங்க நல்லாயிருக்க சுவாமியிடம் வேண்டிக்கச் சொல்லி சகோதரர்களாக இருக்கிறவர்கள் சகோதரிகளுக்கு அனுப்பறது சம்பிரதாயம் தான். ஆனல் சட்டியிலே இல்லாதவங்களுக்குச் சம்பிரதாயமாவது சாஸ்திரமாவது. என்னவோ இந்தத் தடவை தோணியிருக்கு. அனுப்பியிருக்கான்.''

''சரி. பத்திரமாக வை. வீட்டுக்காரன் தை மாசம் பிறந்ததும் தைதைன்னு குதிக்க வருவான். கொடுத்துச் சமாதானம் பண்ணிவைப்போம்.''

மறுநாள் மத்தியானம் சாரநாத் ஆபீசிலிருந்து திரும்பியபோது அவர்கள் போர்ஷன் பூட்டியிருந்தது. கொஞ்ச நேரத்தில், கையில் ஒரு ரசீதுடன் வதனா வந்தாள்.

''எங்கே போயிட்டு வர்றே? வாடகையை முன் கூட்டியே வீட்டுக்காரன்கிட்டே கொடுத்துட்டு [illegible] யாக்கும். இருந்தால் செலவாயிடுமேன்னு? அது என்ன கையிலே ரசீதாட்டம்?''

மௌனமாக நீட்டினள். வாங்கிப் பார்த்தான்.

''மணியார்டர் பண்ணிட்டு வர்றியா? கடவுளே! என்னடி இழவு இது?''

வாயைப் பொத்தி[illegible]. ''அபசகுனம் மாதிரி உளறுதீர்கள். [illegible] ஒரு தரமாவது உங்க தங்கைக்குக் [illegible] அனுப்பியிருக்கீங்களா? அண்ணன் நல்லா இருக்கணும்னு கனுவிலே தங்கை வேண்டிக்கணும். ஏதோ தோணித்து. உங்க தங்கைக்கு அதை மணியார்டர் பண்ணிட்டேன். அவளும் பாவம் கஷ்டப்படறவள் [illegible]''

[illegible] நின்றான்.



# நிறுத்து, கல்யாணத்தை!

''ஜானகி, நாளைக்கு டவுன்லே நாராயண முதலித் தெரு கல்யாண சத்திரத்துக்குப் போறோம்.'' சந்தானத்தின் குரலில் சந்தோஷம் தெறித்தது.

நாராயண முதலி சத்திரம்!

பத்தொன்பது வருஷங்களுக்கு முன்னால் அதே சத்திரத்தில்—

அவள் அப்பா திருமலை கெஞ்சிக் கொண்டிருந்தார்.

''சம்பந்தி, கொஞ்சம் பெரிய மனசு வையுங்கோ. முகூர்த்த வேளைக்கு மூணு மணி நேரம்தான் இருக்கு.''

''அதற்காக? நீர் சொன்ன பேச்சைக் காப்பாத்த வேண்டாமா? அஞ்சு பவுன் நெக்லஸ் என்றால் சும்மாவா?''

சம்பந்தி வீட்டார் மூட்டை கட்டத் துவங்கிவிட்டனர்.

ஜானகிதான் அன்று மணப் பெண்.

''மாமா, நேரம் ஆயிட்டிருக்கு. இப்படியே நின்னா எப்படி?'' என்ற குரலுடன் கம்பீரமாக வந்து நின்ற சந்தானத்தைப் பார்த்து, கதறிவிட்டார் திருமலை. அவன் அவருடைய தங்கை பிள்ளை.

பாமா கோபாலன்

சந்தானம் உறுதியாய்ப் பேசினான். ''மாமா, கவலைப்படாதீங்க. நானே மாப்பிள்ளையா உட்காருகிறேன்.''

கண்ணீரைத் துடைத்துக் கொண்டு, குடும்பத்தின் அவமானத்தைத் துடைத்த அத்தானின் காலில் விழுந்தாள் ஜானகி நன்றியுடன்.

அன்று முதல் இந்தப் பத்தொன்பது வருடங்களாக, கல்யாண தினத்தன்று அந்தச் சத்திரத்திற்கு, சந்தானம் தன் மனைவி ஜானகியுடன் போய் வருகிறார். அதைப் பார்ப்பதில் அவர்களுக்கு ஒரு தனிச் சந்தோஷம்.

மறுநாள். அன்று முகூர்த்த நாள். ஜானகியும், சந்தானமும் அந்த சத்திரத்திற்குப் போனபோது அங்கே ஒரு திருமணம் நடந்துகொண்டிருந்தது.

மாடியிலிருந்து ஏகப்பட்ட கூச்சல். கலாட்டா. ஒரு பெரியவர் தன் கைத்தடியுடன் இரைந்து கத்திக் கொண்டே இறங்கி வந்தார். ''என்னன்னு நினைச்சிருக்காங்க மனசிலே? சொன்னபடி செய்ய வேணும்? மனுஷனுக்கு வாக்கு சுத்தம் வேண்டாமோ? ஏய் முரளி! கல்யாணமும். வேண்டாம் ஒன்றும் வேண்டாம் எழுந்திரு! [illegible] விட்டு!

இந்தப் பெரியவரை எங்கோ பார்த்திருக்கிறோம் என்று ஜானகியும் சந்தானமும் யோசிக்கையில்—

''தாத்தா!'' மணமகனான முரளி என்ற இளைஞன் தடதடவென்று எழுந்து அவரிடம் சென்றான்.

''தாத்தா! ''கல்யாணத்தை நிறுத்தறது உங்களுக்கு வேடிக்கையாகவும், வாடிக்கையாகவும் போச்சு. இப்படித்தான் எங்கப்பா கல்யாணத்தை ஒரு தடவை நிறுத்தினீங்களாம் ஏதோ நகைக் காரணம் காட்டி. அப்பாவே சொல்லியிருக்கார். இப்ப இந்தக் கல்யாணம் நடக்கத்தான் நடக்கும். ம்... மேலே ஆகவேண்டியதைப் பாருங்க...'' மனையில் தீர்மானமாக உட்கார்ந்தான்.

அன்று தங்கள் திருமணத்தை நிறுத்திய அதே பெரியவர்தான் இவர்! சந்தானத்துக்கும் ஜானகிக்கும் ஞாபகம் வந்தது.

ஆனால் காலம் எப்படி மாறி விட்டது! பிள்ளைகள் எவ்வளவு நேர்மையாகவும் இரக்கமுள்ளவர்களாகவும் மாறிவிட்டார்கள்!



# புண்படுத்திவிட்டாள்

'பிரபஞ்ச்'

அன்னம்மாவா அப்படி நடந்து கொண்டாள்? என்னால் நம்பவே முடியவில்லை.

அவள் பெண் சுகுணா கல்யாணத்துக்கு எத்தனை ஆசையாய், அவள் இரவல் கேட்ட நகைகளைப் பெண்ணுக்குப் பூட்டி அவளை அப்படியே அசரவைக்க வேண்டும் என்று நான் துடிப்போடு சென்றேன்! வாசலிலேயே என்னை மடக்கியவள்—கூடவே சம்பந்தியம்மாள் இருக்கிறாளே என்ற நாசூக்குக் கூட இல்லாமல்—கேட்டாளே ஒரு கேள்வி: ''எந்த மூஞ்சியோடு வந்தே? நீ வராம கல்யாணம் நின்னு போயிடுமா என்ன?'' முகத்தைத் திருப்பிக் கொண்டு போய்விட்டாள்.

இந்த அவமானத்துக்குப் பிறகும் என்னால் எப்படி அங்கு நிற்க முடியும்? திரும்பிவிட்டேன்.

அப்படி என்ன இவள் தின்னுகிற சோற்றில் மண்ணை வாரிப் போட்டுவிட்டேன்! போன வாரம் என் இரட்டைப் பேட்டு செயினும் நெக்லஸும் இரவல் தந்தால் சுகுணாவைக் கௌரவமாய் அலங்காரம் பண்ணலாம் என்று கேட்டாள். சத்தியமாய் அப்போது அவை என்னிடம் இல்லை. இவர் ஏதோ ஹவுஸிங் போர்டுக்கு அவசரமாய் முன் பணம் கட்ட வேண்டும் என்று பாங்க்கில் வைத்துக் கடன் வாங்கியிருந்தார். இப்படிக் கேட்கிறாளே என்று இவரிடம் சொன்னபோது பி.எஃப். லோன் வந்துவிடும்; நகையை மீட்டுக் கல்யாணத்துக்கு முன் கொண்டு போய்ப் போட்டுவிடலாம் என்று சொல்லியிருந்தார். ''நீ போ. உன் பெண் மேடையில் உட்காருவதற்கு முன் நீ கேட்ட நகைகளைக் கொண்டு வந்து சேர்க்கிறேன்,'' என்று சொல்லி அனுப்பினேன்.

அதன்படியே தான் நகையோடு போனேன். போடி வெளியே என்று விரட்டாத குறையாய்த் துரத்தி விட்டாளே! பெரிய இடத்தில் சம்பந்தம் கிடைத்து விட்டது என்ற ஆணவமா?

இருபது வருட சினேகத்தை இரண்டு நிமிடங்களில் தூக்கியெறிய இவளுக்கு எப்படி மனம் வந்தது? நினைத்து நினைத்துப் பொருமிக் கொண்டிருந்தேன்.

எதிர்பார்க்கவே இல்லை. கல்யாணம் முடிந்த மறுநாள் அன்னம்மா தன் மகளை அழைத்துக் கொண்டு வீட்டுக்கு வந்திருந்தாள்.

பாவம் சுகுணா, ''சித்தி, நீ ஏன் சித்தி என் கல்யாணத்துக்கு வரலே?'' என்று கண்கலங்கக் கேட்டாள். அப்போது என்னால் தாங்க முடியவில்லை.

''உங்கம்மாவைக் கேள்,'' என்று வெடித்தேன்.

''தங்கம்! என்னை மன்னிச்சுடுடி,'' என்று என்னைக் கட்டிப் பிடித்துக் கொண்டு அழுதாள் அன்னம்மா. ''பொண்ணு மேலே இருக்கிற நகையிலே ஒரு திருகாணி கூடக் குறையாமல் எல்லாம் எங்களைச் சேரவேண்டுமாக்கும் என்று சம்பந்தியம்மா சொல்லியிருந்தாள். அந்த நேரத்திலே நீ உன் நகையைக் கொண்டு வந்து சுகுணாவுக்குப் போட்டால் என்ன ஆகும்? அவளையும் கூட வச்சிட்டு இதையெல்லாம் உன்னண்டை எடுத்துச் சொல்ல முடியுமா? உன் நகையைக் காப்பாத்தத்தாண்டி அப்படி நான் மனசைக் கல்லாக்கிக்கிட்டேன். என்னைத் தப்பா நினைக்காதேடி!''

குழந்தை போல் தேம்பி அழுத அவள் கண்ணைத் துடைத்துவிட்டுச் சுகுணாவை ஆதரவோடு அணைத்துக் கொண்டேன்.

# அந்த வீடு ஏன் வேண்டாம்?

ரொம்ப நாட்களாய் சங்கரை நச்சரித்துக் கொண்டிருந்தார் கணபதி. நான்கு வயதுவந்த பெண்களை வைத்துக்கொண்டு அந்த ஒண்டுக் குடுத்தனத்தில் சமாளிப்பது மகா இடைஞ்சலாக இருக்கிறதாம்.

சங்கர் அவருடைய அலுவலகத்தில் வேலை செய்யும் இளைஞன். நாலு இடத்தில் விசாரித்தான்.

கணபதி இருக்கும் வட்டாரத்திலேயே வேறொரு தெருவில் தனியான வீடு ஒன்று குறைந்த வாடகையில் காலியாக இருப்பது தெரியவந்தது. கணபதியைத் தேடிப் போய் விஷயத்தைச் சொல்லிவிட்டு வந்தான்.

மறுநாள் கணபதி அவனிடம் வந்தார். "நான் போய் வீட்டைப் பார்த்துவிட்டு வந்தேன் சங்கர். பிரமாதம். அந்த வீட்டுக்கு வாடகை ஆனாலும் குறைச்சல்தான். ஆனால் என் பெண்களுக்கு அது பிடிக்கவில்லை. குறிப்பாய், என் மூத்த பெண் ஸ்வர்ணா ரொம்ப மூர்க்கமாய் எதிர்க்கிறாள்...." என்றார்.

சங்கருக்கு வியப்பு ஏற்பட்டது. "ஏன் சார்.... எதனால் வீடு பிடிக்கலேன்னு சொல்றாங்க?"

"அதான் சொல்லவே மாட்டேங்கறாங்களே! காரணத்தைச் சொல்லாமல் அந்த வீடே வேண்டாம் என்கிறாள். வேறு ஏதாவது இருந்தால் சொல்லுங்க," என்று கூறிவிட்டுக் கணபதி போய்விட்டார்.

அந்தப் பெண்களின் மேல் அவனுக்குக் கோபம் கோபமாய் வந்தது. ஏழையானாலும் திமிர்!

"சங்கர்... கொஞ்சம் கறிகாய்க் கடைக்குப் போய்விட்டு வாயேன்," என்றாள் அம்மா.

புறப்பட்டான். கடையில்—

"ஸ்வர்ணா, இந்தக் கத்தரிக்காய் பிஞ்சா இருக்கு...." என்று ஒரு பெண் இன்னொருத்தியிடம் சொல்லிக் கொண்டிருந்தாள். எல்லோரும் கணபதியின் பெண்கள்தான் என்று அவனுக்குப் புரிந்தது.

"ஏன்க்கா அந்த நல்ல வீடு வேண்டாம்னு சொன்னே? அப்பாவுக்கு ஒரே கோபம் நம்ம மேலே," என்றாள் ஒருத்தி.

ஸ்வர்ணா சொன்னாள். "அதான் சொன்னேனேடி? வீடு இருக்கிற தெருவில், கோடியில் கல்யாண மண்டபம் ஒன்று இருக்கு.... நாளுக்கொரு கல்யாணமும் வேளைக்கொரு ஊர்வலமும் நடக்கும் போது, குதிர் குதிராய் நாலு பெண்கள் நாம் வீட்டில் நிற்பதை நினைத்து நம் அம்மாவுக்கும் அப்பாவுக்கும் மனசில் எத்தனை வேதனை ஏற்படும்? அதற்காக அதைப் போய் வெளிப்படையாய்ச் சொல்ல முடியுமா? நமக்குக் கல்யாண ஆசை போலிருக்கு, அதுதான் இப்படிப் பேசறாள்னு நினைப்பாங்க..."

சங்கருக்கு மனசை என்னமோ செய்தது.

வேதா கோபாலன்





# தொடுவதற்கு நேரமில்லை

புரிந்தும் புரியாத புதுக் கவிதை மாதிரி, மறைந்தும் மறைக்காத ஆடைச் சரிவுடன் அழகு பிதுங்கப் படுத்திருந்தாள், ஜானகி.

மனத்தில் ஆசை சிறகடிக்க மெள்ள அவளைத் தொட்டேன்.

''ச்சு... கூடத்தில் ஆனந்தி படித்துக் கொண்டிருக்கிறாள். கதவில்லாத அறை. பேசாமல் படுங்கள்,'' என்று என்னை கலைக்கி விட்டாள், அவள்.

உண்மைதான்.

''ஆனந்தி.''

''என்ன, அப்பா?''

''மணி பதினொண்ணே கால் ஆகுதும்மா. தூங்கலையே?''

''தூக்கத்தைப் பார்த்தால் முடியுமா, அப்பா. பரீட்சைக்கு நிறைய படிக்க வேண்டியது இருக்கிறதே.''

சரி... இப்போது வேண்டாம். அதிகாலை நாலு மணி சுமாருக்கு பார்த்துக் கொள்ளலாம் என்று சமாதானத்துடன் உறங்கிப் போனேன், நான்.

4.10க்கு அவளுக்கும் எனக்கும் சேர்ந்தாற்போல் விழிப்பு வந்துவிட்டது. குரலைக் கனைத்துக் கொண்டேன்.

அப்போது பளிச்சென்று விளக்கு அடித்தது, கூடத்தில்.

''யார்... ஆனந்தியா?'' என்றேன்.

''ஆமாம், அப்பா. ராத்திரிப் படித்ததில் கொஞ்சப் போர்ஷன் பாக்கி இருக்கிறது. அதை இப்போது முடித்து விடப் போகிறேன்'' என்று சுறுசுறுப்பாக முகம் கழுவினாள், ஆனந்தி.

சே! மகள்மீது ஒரே எரிச்சல்!

அலுவலகம் வந்தேன்.

''என்ன மிஸ்டர் ராமு. ராத்திரி பன்னிரண்டு மணிக்குப் பார்த்தேன் உங்கள் வீட்டில் விளக்கு எரிந்தது. அப்புறம்... என் மாமனார் ஊரிலிருந்து வந்திருந்தார். அவரை விடிகாலை நாலு மணி பஸ்ஸில் ஏற்றிவிடப் போனேன். அப்போதும் விளக்கு எரிந்ததே... என்ன விஷயம்'' என்றார் விசுவம்.

வயிற்றெரிச்சலை அடக்கிக் கொண்டு, ''என் பொண்ணு பரீட்சைக்குப் படித்துக் கொண்டிருந்தாள்,'' என்றேன்.

விசுவத்தின் விழிகளில் பேராச்சரியம் மின்னிற்று. ''ராத்திரி பன்னிரண்டு மணி வரையில் படிச்சுட்டு, மறுபடியும் விடிகாலை நாலு மணிக்குப் படிக்கிறதுன்னா லேசுப்பட்ட காரியமில்லை, ராமு. பாடத்திலே அசாத்திய ஆர்வம் இருந்தால் தான் அப்படி படிக்க முடியும். ம்... என் பொண்ணும்தான் இந்த வருஷம் பத்தாவது எழுதப் போகிறாள். என்ன பிரயோசனம்? ஏழரை மணிக்கெல்லாம் மூக்குப் பிடிக்கச் சாப்பிட்டு விட்டு, நன்றாக இழுத்துப் போர்த்திட்டுப் படுத்து விடுகிறாள்....''

அன்று மாலை உற்சாகத்துடன் வீடு திரும்பினேன்.

மனைவியை எண்ணி அல்ல.

மகளை எண்ணி.

தமிழினியன்




ஏதோ ஓர் அசட்டுத் துணிச்சலில் முத்துவைக் கூட்டிக்கொண்டு அவன் மனைவி கண்ணம்மா மிஷன் ஆஸ்பத்திரிக்கு வந்துவிட்டாள்.

பிரும்மாண்டமான மிஷன் ஆஸ்பத்திரி.

கண்ணைக் கட்டிக் காட்டில் விட்டதுபோல் அவள் தவித்துக் கொண்டிருந்தபோதுதான், அந்த முதியவர், தெய்வம் போல் வந்தார்.

அவர் தன் மனைவிக்கு ஏதோ மார்வலி என்று, சேர்த்து அவளுக்குத் துணையாய் பதினாறும் நம்பர் வார்டில் தங்கியிருப்பவர்தான். 'பயப்படாதே. நான் இருக்கிறேன்,' என்று ஆறுதல் சொன்னார். சொன்னதோடா? அவருக்கு அங்கு எல்லோரையும் தெரிந்திருக்கிறது. சொல்லவேண்டியவர்களிடம் சொல்லி, சேர்க்க வேண்டிய இடத்தில் சேர்த்து, நல்லபடி வைத்தியம் பார்க்க வைத்தார்.

முத்துவுக்கு ஆபரேஷன் நடந்து வயிற்றிலிருந்து ஒரு கட்டியை எடுத்தார்கள்.

மூன்றாம் நாள் டாக்டர் வந்து ஆபரேஷன் செய்த இடத்தைப் பரிசோதித்தபோது, திடுதிப்பென்று ரத்தமாய் வழிந்தது. ஒரு மருந்து சீட்டு எழுதிக் கொடுத்து, ''உடனே வெளியில் போய் வாங்கி வாருங்கள்,'' என்றார் கண்ணம்மாவிடம்.

சீட்டுடன் அரக்கப் பரக்கப் பெரியய்யாவிடம் ஓடிவந்தாள் கண்ணம்மா. அவர் தன் மனைவியின் கட்டிலுக்குப் பக்கத்தில் ஸ்டூலை இழுத்துப் போட்டு உட்கார்ந்துகொண்டு கன்னத்தில் கை ஊன்றியபடி மனைவியையே வெறித்துப் பார்த்துக்கொண்டிருந்தார்.

கண்ணம்மா பதைப்போடு, ''ஐயா, இந்த மருந்து வாங்கி வரச் சொல்றார் டாக்டர். எப்படி வெளியே போறது, எங்கே கேட்கிறது ஒண்ணும் தெரியலே. கொஞ்சம் கூட வந்திங்கன்னா...'' என்று கெஞ்சினாள்.

அவர் கட்டிலையும் அவளையும் மாறி மாறிப் பார்த்துத் தடுமாறினார். ''வந்து... இப்ப...'' சற்றுத் தயங்கினார்.

கண்ணம்மாவுக்கு என்னமோ போலாகிவிட்டது. ''அது சரி... அவங்கவங்களுக்கு அவங்கவங்க கவலை இல்லையா? என் தலைவிதிப்படி ஆகட்டும்,'' என்று திரும்பினாள்.

''கொஞ்சம் இரம்மா, வரேன்,'' என்று அவளை அழைத்துக்கொண்டு வெளி வந்தார்.

மருந்து வாங்கித் தந்தார். கூடவே இருந்தார். ஆறுதல் சொன்னார். முத்துவுக்கு இனி ஆபத்தில்லை என்று அந்த வார்டு டாக்டர் சொன்ன பிறகுதான் திரும்பிப் போனார்.

முத்து அமைதியாய் உறங்க ஆரம்பித்த பிறகு கண்ணம்மாவுக்கு மனசு குறுகுறுத்தது. 'ஐயோ! அத்தனை உபகாரியை, நல்ல மனிதரை மனம் நோகப் பேசிவிட்டோமே,' என்று மன்னிப்புக் கோருவதற்காகப் பெரியய்யாவைத் தேடி வந்தாள்.

அங்கு அவள் கண்ட காட்சி அவளைத் தூக்கி வாரிப் போட வைத்தது. அந்த அறையிலிருந்து பெரியய்யாவின் மனைவியை முழுசாகப் போர்த்தி ஸ்டிரெச்சரில் வெளியே தள்ளிக்கொண்டு வந்தார்கள். ''ஐயா... என்னங்க இது?''

''நீ வந்து கூப்பிட்டியே அப்பவே போயிட்டாம்மா. ஹூம்... அது போன உயிர். நான் கூட இருந்தா மீட்டுடப் போறேனா! அந்த நேரத்திலே உனக்கு ஒத்தாசையா இருந்து உன் கண்ணீரைத் துடைச்சேனே, அது பெரிசில்லையா?'' என்றார் பெரியய்யா.

அவள் வாயடைத்துப் போனாள்.

பி.எஸ்.எஸ்.

# குழந்தையை ஏன் தொடமாட்டேங்கறீங்க?



குழந்தையைப் பக்கத்திலே போட்டுட்டுப் படுத்துட்டேன். பத்து நாளைக்கு முன்னாலே அம்மா வயத்திலே தூங்கிக் கொண்டிருந்த சுகத்தை விடக் கூடாதுன்னோ என்னவோ அது சொப்பு வாயை மூடிட்டுச் சின்னச் சின்னக் கண்ணைச் சின்னச் சின்ன ரெப்பையாலே மூடிட்டுத் தூங்கிட்டிருந்தது. ரோஜாப் பூன்னு ரோஜாப்பூதான்.

''ராஜா தூங்கிட்டானும்மா?'' கேட்டுவிட்டு, ''என் தங்கம்!'' என்று அதன் கன்னத்தில் முத்தமிட்டுவிட்டுப் போனார் என் மாமியார்.

''குழந்தையைக் கொசு கடிக்கப் போறதம்மா. கொசுவலைக் குடையை விரிச்சு வைக்கிறதுதானே?'' என்று சொன்ன மாமியார் சொன்னதோடு நிறுத்திக் கொள்ளாமல் கொசுவலைக் குடையைப் பிரித்தார். குழந்தையின் குட்டிப் படுக்கையின் மேலே அதை வைப்பதற்கு முன், ''ரோஜாப்பூன்னு ரோஜாப்பூ தான்,'' என்று குழந்தையின் தாடையைப் பிடித்துக் கொஞ்சம் ஆட்டிவிட்டார்.

''மன்னி!'' என்று ஓடிவந்தாள் என் மைத்துனி பிருந்தா. ''குழந்தையைப் பார்க்காமே தூங்கப் போக மனசு வரலே மன்னி!'' என்றபடி கொசுவலைக் குடையை எடுத்துத் தூக்கித் தள்ளி வைத்துவிட்டுக் குழந்தையைத் தூக்கித் தன் மடியில் போட்டுக் கொண்டு இடது தொடையைத் தூக்கித் தூக்கி ஆட்டினாள்.

சுகமாகத் தூங்கிக் கொண்டிருந்த குழந்தையின் தூக்கத்துக்குத் தொந்தரவு ஏற்படவே அது சிணுங்கியது. சின்னக் குரலில் அழுதது.

''ழுழுழுழுழுழு ஆயி.... ழுழுழுழுழுழு ஆயி....'' பிருந்தா செய்த சமாதானம் ஒன்றும் எடுபடவில்லை.

**சுகந்தி**

என் மைத்துனர் ஓடிவந்தார். ''இப்படியாடி குழந்தையை அழவிடறது? கொண்டா,'' என்று குழந்தையை மடியிலிருந்து எடுத்துத் தம் இடது தோளில் சாத்திக் கொண்டு அங்குமிங்கும் நடந்தபடி அதன் முதுகில் தட்டிக் கொடுக்க ஆரம்பித்தார்.

அதுவோ மேலும் அழ ஆரம்பித்தது. என் கணவரின் பாட்டி தட்டுத் தடுமாறி வந்து தன் எலும்புக் கை விரல்களால் குழந்தையைத் தூக்கித் தூளியில் போட்டு, 'ஆராரோ ஆரிரரோ, யாரடிச்சா சொல்லி அழு,'' என்று பாட ஆரம்பித்தார்.

குழந்தை அழுகிற இந்த நேரம் தான் என்றில்லை. அது தூங்குகிற, முழித்துக் கொண்டிருக்கிற எந்த நேரமானாலும் சரி அதை ஒருவர் மாற்றி ஒருவர் தூக்கி வைத்துக் கொள்வார்கள். கன்னத்தைக் கிள்ளி, தாடையைப் பிடித்துக் கொஞ்சுவார்கள். எப்பொழுது பார்த்தாலும் குழந்தை யாரிடமாவது தான் இருக்கும். பால் குடிக்கிற நேரம் தான் அது என் குழந்தை.

இப்படி எல்லோரும் அதனிடம் குழந்தை குழந்தை என்று உயிரை விட்டுப் பிரியம் காட்டுவதும் கொஞ்சுவதும் அன்புடனும் ஆசையுடனும் இருப்பதும் பெற்றவளான எனக்குக் கொடுத்த சந்தோஷம் கொஞ்சம்தான்.

இவர்களைப் போல எல்லாம் என் கணவர் மட்டும் ஏன் குழந்தையைக் கொஞ்சுவதில்லை? அதைக் கையாலேகூடத்

தொடுவதில்லையே! தள்ளி நின்று குழந்தையைப் பார்ப்பதோடு சரி.

குழந்தை பிறப்பதற்கு முன்பு.

எல்லோரும் தலைச்சன் குழந்தை ஆண் பிள்ளையாகத்தான் பிறக்கவேண்டும் என்று ஆசைப்படுவார்கள். இவரோ பெண் குழந்தைதான் பிறக்க வேண்டும் என்று ஆசைப்பட்டார். ஏன், வேண்டிக் கொள்ளக்கூடச் செய்தார். முதலில் பெண் பிறந்தால் சர்வீசில் இருக்கும் பொழுதே உடம்பில் தெம்பும் பலமும் இருக்கும் பொழுதே அதற்குக் கல்யாணம் கார்த்தி செய்து முடித்துவிடலாமாம். அதனுல் தான் பெண் குழந்தை பிறக்க வேண்டுமென்று ஆசைப்படுகிருராம்.

பிறந்தது என்னவோ ஆண் குழந்தை.

தான் எதிர்பார்த்ததில் ஏமாற்றம் அடைந்துவிட்டதால் அவருக்குக் குழந்தையைப் பிடிக்காது போய்விட்டதோ? எல்லோரும் குழந்தையைத் தூக்கித் தூக்கிக் கொஞ்சும் போது இவரால் எப்படிக் கையைக் கட்டிக் கொண்டு உட்கார்ந்திருக்க முடிகிறது?

யாரோ பக்கத்தில் வந்து உட்காருவது போல் இருந்தது.

திடுக்கிட்டுக் கண் விழித்து பார்த்தேன்.

என் கணவர்.

தூங்கும் குழந்தையையே வைத்த கண் எடுக்காது பார்த்துக் கொண்டிருந்த அவர் குழந்தையைத் தொடத் தன் கையை நீட்டுவதும் சுருக்கிக் கொள்வதுமாக இருந்தார். அவரது செய்கை விசித்திரமாக இருந்தது.

''உங்கள் குழந்தைதானே? ஏன் தொடக்கூட மாட்டேங்கறீங்க?'' என்று அடக்க முடியாதவளாகக் கேட்டேன்.

அவர் கண்ணில் கண்ணீர் பளபளத்தது.

''ராஜி! என் குழந்தையை அள்ளி எடுத்து முத்தமிட்டுக் கொஞ்சலாம் என்கிற ஆசை எனக்கு ரொம்ப இருக்கு. ஆனுல் பிறந்து பத்தே நாளான பிஞ்சுக் குழந்தையை ஒருவர் மாற்றி ஒருவராக எடுத்து எடுத்து அதை இம்சைப் படுத்தருங்க. அதனுடைய பஞ்சான உடம்பு இவர்களாலே ஏற்படற உபாதையைத் தாங்க முடியாமே அவஸ்தைப் படுவதைப் பார்க்கிறப்போ நாமும் குழந்தையைத் தூக்கி அதுக்குச் சிரமம் கொடுக்க வேண்டாம்னு தான் குழந்தையைத் தொடாமே இருக்கேன், ராஜி!'' என்ருர் அவர்.

''கோழி மிதிச்சுக் குஞ்சுக்கு ஒண்ணும் ஆகாதுங்க!'' என்றபடி அவர் கையில் குழந்தையைத் தூக்கிக் கொடுத்த பொழுது எனக்கு உண்டான சந்தோஷத்திற்கு அளவேயில்லை.

## கடைசி ஆணி



இந்தப் பட்ஜெட் அ.தி.மு.க.வின் கடைசி பட்ஜெட் என்று துரைமுருகன் கூறினர். அது தவறு. தி.மு.க. தலைதூக்க முடியாமல் சவப் பெட்டிக்குள் வைத்து அடிக்கப்பட்ட கடைசி ஆணிதான் இந்தப் பட்ஜெட். எத்தகைய நல்ல திட்டங்களைக் கொண்டு வந்தாலும் பாராட்டும் எண்ணம் தி.மு.க.வுக்கு வரவே வராது.

—ஜே.வி.டி. பிரபாகரன்

"காலை அஞ்சு மணிக்கு எழுந்திருக்கவேண்டியவன், இப்படி 'லேட்'டா எழுந்திருந்து அவசரப்படுத்திஞ அப்படித்தான்..."

"என்னடீ... என்ன ஆச்சு?"--பயத்துடன் கேட்டபடி ஓடிவந்தார் அப்பா.

"என்ன ஆச்சோ... ஆனது அவனுக்கு. என்கிட்ட வந்து அலறினீங்கன்னு எப்படி?" என்று அலுத்துக் கொண்டாள் அம்மா.

அப்பா, அதீத பயத்துடனும், ஆச்சரியத்துடனும் பாத்ரூமிற்குள் ஓடினர். அங்கே குமார் வாந்தி எடுத்தபடி சுவரில் சாய்ந்திருந்தான். வாயிலிருந்து, ஒரு விதமான வெள்ளை நுரை வெளியேற பிரயத்னம் பண்ணிக் கொண்டிருந்தது.

"குமார்.. குமார்... டேய்... என்னப்பா பண்றது? எழுந்திருப்பா... எழுந்திரு... ஐயோ, காலங்கார்த்தாலே 'கரண்ட்' வேற இல்லயே..." —மிகுந்த ஆசையுடன் குமாரை எழுப்ப முயன்ற அப்பா தோல்வியுற்று, அவனைத் தூக்கி வந்து ரூமில் கிடத்தினர்.

அரைமயக்கத்திலிருந்தான் குமார்.

"டீ... காப்பி ஒண்ணு போடு. கொஞ்சம் தண்ணீ கொண்டு வா...அந்தமெழுகு வர்த்திய எரியவிடு. ஐயோ.. இவ்வளவு படிக்க வச்சேனே! 'இன்டர்வ்யூ' போற நாள்லயா உன் நிலைமை இப்படியாகும்? இருபத்திரண்டு வயசிலேயே உனக்கு நுரைதள்ளற வியாதி வருமா? ஈச்வரா...."—அப்பா ஏதேதோ பிதற்ற, காப்பி வந்தது.

முகத்தில் தண்ணீர் தெளித்து வாயைத் துடைக்கும்போது, வந்த வழக்கமான 'வாடை'யை அப்பாவால் ஊகிக்க முடியவில்லை.

"ம்.. உள்ளா!" என்று குத்திப்பிடுங்கிக் கொண்டபடி, குமார் கீழே வெள்ளையாகத் துப்பினன்.

அம்மாவுக்கும் பயத்தின் தீவிரம் அதிகரிக்கத் தொடங்கியது. "என் கண்ணு.. ராசா... என்னம்மா பண்றது? சொல்லும்மா..." —தாய்ப்பாசம் கரை புரண்டு ஓடியது.

"இந்தாப்பா.. இந்தக் காப்பியக் குடி. ம்.., மெதுவா..." என்றபடி தன் மடியில் சாய்த்துக் கொண்டார் அப்பா.

லேசாகக் கண்விழித்த குமார், மனத்துக்குள் சிரித்தபடியே, அலமாரியை நோக்கிச் சுட்டிக்காட்டினன்.

அங்கே —

'டூத்பேஸ்ட்'டுக்குப் பதிலாக, 'ஷேவிங் க்ரீம்' திறந்து வைக்கப்பட்டிருந்தது.

ஹயக்ரீவன்





‘‘இதோ பார், நாம் குடித்தனம் வைத்த பிறகு முதல் தடவையாகப் பாட்டி வந்திருக்கிருள். ஒரு குறையும் வைக்காமல் பிரியமாய்ப் பார்த்துக் கொள்ளணும்,’’ என்ருன் வசந்தன்.

‘‘கவலேயே படாதீர்கள்,’’ என்ருள் நீலா. ‘‘பாவம், கிராமத்துக் கிழவி. அவரை எப்படிச் சந்தோஷப் படுத்துவது என்று எனக்குத் தெரியும்.’’

காமாட்சிப் பாட்டியைக் கொஞ்சம் முன்னுடிதான் இருவருமாகச் சேர்ந்தேபோய் எழும்பூர் ஸ்டேஷனுக்கும் சென்று வரவேற்று வீட்டுக்கு டாக்ஸியில் அழைத்து வந்திருந்தார்கள். அன்று பூரா ஏகப்பட்ட உபசாரம்.

சாயந்தரம் ஆறு மணியாயிற்று.

‘‘இப்படி உட்கார் பாட்டி,’’ என்று நாற்காலியை இழுத்துப் போட்டான் வசந்தன்.

‘‘அந்தப் பெட்டிக்குப் பேர் டி.வி. பாட்டி. சினிமா மாதிரி பார்க்கலாம்,’’ என்று நீலா விளக்கினுள்.

வசந்தன் டி வியை ‘ஆன்’ பண்ணிவிட்டு, ‘‘நாற்காலியை இன்னும் கொஞ்சம் பின்னுல் நகர்த்திக்க, பாட்டி. இல்லாவிட்டால் கண்ணுக்குக் கெடுதல்,’’ என்ருன்.

‘‘சரிடாப்பா,’’ என்ருள் பாட்டி.

‘‘சில நாளேக்குக் கலர் கலராய்ப் படம் வரும். சில நாளேக்குக் கறுப்பு வெளுப்பாய் இருக்கும். இன்னிக்குக் கறுப்புப் படம்தான்,’’ என்ருள் நீலா.

பாட்டி உற்சாகம் குன்ருமல் ‘‘ஏதோ ஒன்று,’’ என்ருள்.

ஓர் இங்கிலீஷ் சினிமா ஓட ஆரம்பித்தது.

‘‘ஐய்யய்ய! இந்தக் கண்ணராவியெல்லாம் எதுக்கு? ஏதாவது நல்லதாய்த் தமிழ்ப் படம் போடு,’’ என்ருள் பாட்டி.

வசந்தனும் நீலாவும் ஒருவரையொருவர் ரகசியமாகப் பார்த்துக் கொண்டு, பாட்டியின் அறியாமையை எண்ணிச் சிரித்துக் கொண்டார்கள்.

‘‘பாட்டி, அவங்க என்ன காட்டறுங்களோ, அதைத்தான் நாம் பார்க்கணும். நாம் இஷ்டப்பட்ட சினிமாவைப் பார்க்க முடியாது,’’ என்ருன் வசந்தன்.

‘‘அப்ப நீ என்ன பண்ணறே, கிராமத்திலே அந்த முத்துப் பண்ணேயார் வீட்டிலே பண்ணியிருக்கிற மாதிரி பண்ணிவிடு,’’ என்ருள் பாட்டி.

‘‘என்ன பண்ணியிருக்கிருர்?’’

‘‘வீடியோ டெக் இருக்கே அதை வாங்கி வை. அதிலே வீடியோ கேஸட்டுன்னு ஒண்ணு இருக்கு. அதை வாங்கி அதிலே போட்டுக்கலாம். எந்தப் படம் இஷ்டமோ அந்தக் கேஸட்டை வாங்கிட்டு வந்து பார்க்கலாமே?’’ என்று பாட்டி சொன்னதும்—

வசந்தனும் நீலாவும் மயங்கி விழுந்தவர்கள் வெகு நேரத்துக்கு எழுந்திருக்கவில்லே.

கே. பாரதி




சீனு மௌனமாக நடந்து கொண்டிருந்தான். பக்கத்தில் வந்து கொண்டிருந்த கிட்டா மௌனத்தைக் கலைத்தான்.

''சார்... டில்லிலேருந்து இத்தனை தொலைவு வந்து இந்தச் சின்னஞ்சிறு கிராமத்துல ஒரு பாழடைந்த வீட்டை வாங்கப் போறீங்களா..?''

சீனு பதில் சொல்லாமல் நடந்தான்.

''டில்லில இல்லாத இடமா சார் இங்க இருக்குது..?'' — கிட்டா விடாமல் கேட்டான்.

''அப்படி இல்ல கிட்டா. அப்பா அந்த வீட்லதான் பிறந்து வளர்ந்தாராம். அதை வாங்கணும்னு அப்பாவுக்கு ரொம்ப ஆசை. ஆனா கடைசி வரைக்கும் முடியலே. இப்பத்தான் அதை வாங்க எனக்குச் சந்தர்ப்பம் கிடைச்சிருக்கு. அப்பா இருந்தா ரொம்ப சந்தோஷப் படுவார்..'' — சொல்லும்போதே சீனுவுக்குக் கண் கலங்கியது.

''உங்க அப்பா யாரு சார்?''

''பாலகிருஷ்ணன்!''

''ஓ! அவரா..? என்னோட அப்பா ரொம்ப சொல்லிருக்கார். ஓகோன்னு வாழ்ந்தவங்களாம். திடீர்னு நொடிச்சுப் போயி ஊரை விட்டே போயிட்டாங்களாம்..''

''.....''

அக்ரஹாரத்துக்குள் நுழைந்தார்கள்.

தெருவே வெறிச்சென்றிருந்தது.

''என்ன கிட்டா... தெருவுலே நடமாட்டமேயில்லே..?''

''இந்த நேரத்துல எல்லாரும் தூங்கிக்கிட்டு இருப்பாங்க. அதோ... அதுதான் சார் உங்க வீடு....''

அந்த வீடு பாழடைந்திருந்தது. மூடிய கதவின் தலையில் துரு ஏறிய பூட்டு தொங்கிக் கொண்டிருந்தது. சுவர்கள் இடிந்து விழுந்து உள்ளே நுழைவதற்குப் பல வழிகளை உண்டாக்கியிருந்தன. ஜன்னல்களில் செடிகள், மரங்களாக முயற்சித்துக் கொண்டிருந்தன.

வீட்டுக்குள் நுழையும்போது சீனு பரவசப்பட்டான். 'இது என் அப்பா வீடு... சின்னப் பிள்ளைல அப்பா இங்கெல்லாம் நடந்திருப்பார்..' — நினைக்கும்போதே அவனுக்குச் சுகமாக இருந்தது.

''சார், கடைத் தெருவுல எனக்குக் கொஞ்சம் வேலையிருக்கு. நீங்க சாவகாசமா வீட்டைப் பார்த்துட்டு வாங்க. நான் போறேன்...'' என்றான் கிட்டா.

''சரி!'' என்றதும் கிட்டா நகர்ந்தான்.

பிடரியில் கை வைத்ததும் சிலிர்த்துக் கொண்டு ஓடும் கன்றுக்குட்டியின் பரவசத்துடன் சீனு வீட்டைச் சுற்றிப் பார்த்தான். சிறிது நகர்ந்து உள்பக்கம் போனான். அங்கே ஓடுகள் விழுவது போல பயமுறுத்திக் கொண்டிருந்தன. சுவரைப் பார்த்துக் கொண்டே நடந்தான். சுவரின் மூலையில் பொடிசாக எழுத்துப்போல செதுக்கியிருந்தது. கொஞ்சம் கஷ்டப்பட்டுப் படித்தான். 'பாலு.. சியாமா...' சுவரைப் பிடித்துக் கொண்டே நகர்ந்தான். நாலைந்து இடங்களில் 'பாலு... சியாமா' என்று எழுதியிருந்தன. 'யார் இந்த சியாமா? அப்பா எழுதியிருப்பாரா? பாலுன்னு அப்பாதான். சியாமாங்கிறது அப்பா நேசிச்சப் பொண்ணு? அதனலதான் தங்கச்சிக்கு சியாமான்னு அப்பா பேரு வச்சாரா..?' அவனுக்கு ஆச்சரியமாயிருந்தது. 'அப்புறம் ஏன் அப்பா சியாமாவை விட்டுவிட்டு அம்மாவைக் கல்யாணம் பண்ணிக்கிட்டார்... அப்பாவுக்கும் என்னைப் போலவே நேசிச்ச பொண்ணைச் சொந்தமாக்கிக்க முடியலையா?' அப்பாவை நினைச்சதும் அவனுக்குக் கண்ணீர் வந்தது. 'அப்பா! இதுக்காகத்தான் இந்த வீட்டை வாங்கறதுக்கு அப்படித் துடிச்சிங்களா?' அந்த எழுத்துக்களைத் தொட்டுத் தடவினான். அப்பாவையே அன்புடன் தொட்டு அணைப்பது போலிருந்தது.

— மதுமிதா

# நேரம் கழித்து வரச்சொன்னது ஏன்?



சி. பூபால்சிங்

வேணு தனிக்குடித்தனம் வைத்து விளையாட்டுப் போல் இரண்டு மாதம் ஆகிவிட்டது.

தனது மனைவியை நினைக்க நினைக்க அவனுள்ளே ஆச்சரியமே மேலோங்கியது. எப்பேர்ப்பட்ட பெண் இவள்: மிகுந்த பொறுமைசாலியாய் இருப்பாள் போலிருக்கிறதே....!

வேலைக்காரி காலையில் வந்து வீட்டுக் கதவைத் தட்டினால்தான் எழுந்திருப்பது என்ற முடிவுடனே நிறையபேர் வாழ்க்கை நடத்தும் போது இவள் மட்டும் எப்படி மாறுபட்டிருக்கிறாள்?

வேணு அலுவலகம் கிளம்பும் வரையில் ஒரு நாள் கூட அவன் வேலைக்காரியின் முகத்தைப் பார்த்தது கிடையாது.' அவள் வருவதற்குள் பாதி வேலைக்கு மேல் அவனுடைய மனைவியே செய்து முடித்து விடுவாள்.

ஞாயிறு போன்ற விடுமுறை நாட்களில்தான் அவன் வேலைக்காரியைக் காண முடியும். இல்லாவிட்டால் வீட்டிற்கு ஒரு வேலைக்காரி இருக்கிறாள் என்பதையே அவன் சத்தியமாக நம்பிக் கூட இருக்க மாட்டான்.

இத்தனைக்கும் அவள் எதிரே இருக்கும் குடிசையில் தான் வசிக்கிறாள். சம்பளம் கூட மற்ற வீடுகளில் கொடுப்பதை விடப் பத்து ரூபாய் கூடுதல். இருந்தும் அவள் தினம்போல் தாமதித்து வருவதன் காரணம்தான் என்ன?

பொறுமையும் வியப்பும் எல்லை மீறிப்போய் ஒரு நாள் அவன் தன் மனைவியிடம் இது குறித்து வாய்விட்டே கேட்டுவிட்டான்.

அவள் கூறினாள் ''உங்களுக்கு ஒண்ணும் தெரியாது. கொஞ்சம் வாயை மூடிக்கிட்டு இருங்க. நான்தான் வேலைக்காரியை நேரங்கழித்து வரச் சொல்லியிருக்கேன். எல்லாம் எங்க அம்மா சொல்லியனுப்பி இருக்காங்க.''

''என்ன சொல்லியிருக்காங்க? 'உன் புருஷனை நம்பாதே, ஒரு மரத்துக்குச் சேலையைக் கட்டினால்கூட அதைப் பார்த்து முறைப்பவன் அவன், அதனால வேலைக்காரியை அவன் கண்ணிலேயே காட்டாதே,' என்றா?''

''போதுமே! சமத்து வழியுது. இப்ப பாருங்க, வேலைக்காரி முதல்ல நம்ம வீட்டுக்கு வந்து வேலையை முடிச்சிட்டு அப்புறமா மத்தவங்க வீட்டுக்குப் போனா, நம்ம வீட்டு விஷயத்தைப் போற இடத்தில எல்லாம் டமாரம் அடிக்க அவளுக்கு வாய்ப்பு ஏற்படும். கடைசியா நம்ம வீட்டுக்கு வர்றதாலே அதைத் தவிர்த்திடலாம். அது மட்டுமில்லே. மத்த வீட்டிலே வேலையை முடிச்சிட்டு, கடைசியோ கடைசியா இங்கே வர்றதாலே அவ மூலமா அந்த எல்லா வீட்டு விஷயத்தையும் தெரிஞ்சிக்க முடியுது. அதனாலதான் அவளுக்கு மத்த வீட்டை விட இங்கே சம்பளம் பத்து ரூபாய் அதிகம்.''




# மைத்துனன் வழி

குருபாதம் காப்பியைச் சாப்பிட்டவாறே வேணுவிடம் கேட்டான். ''உங்க அக்கா என்னவோ சொன்னளே. என்னவோ எஸ்.எம்.கே. சிட்பண்ட் என்கிற ஆபீசில் கொள்ளைப் பணம் போட்டுட்டு முழிக்கிறியாமே?''

''ரொம்ப ஒண்ணும் போடலே, அத்திம்பேரே.''

''ஐயாயிரம்னளே?''

''ஐயாயிரம் போடணும்னு பார்த்தேன். நாலாயிரம்தான் போட்டேன்.''

''ரொம்ப வித்தியாசமாக்கும்? சரி, சரி. பணம் கோவிந்தாவாமே?''

''அப்படியெல்லாம் ஒண்ணுமில்லையே.''

''உங்க அக்கா பின்னே சொன்னளே?''

''நடுவிலே ஏதோ கம்ப்யூட்டர் யந்திரம் தகராறுன்னு வட்டி ரெண்டு மூணு மாசம் அனுப்பாமல் இருந்தான்.

''ஓகோ. கம்ப்யூட்டர் வேறயா இந்த மாதிரி ஏமாற்றுக் கம்பெனிகளுக்கு? நீ ஏதாவது பாங்கிலே போடறதுக்கென்ன?''

''எஸ்.எம்.கே. சிட்பண்ட்ஸ்லே பாங்கியைப் போல ஏறக்குறைய இரண்டு மடங்கு வட்டி அத்திம்பேர். மாசம் ஐந்தாம் தேதி டாண்ணு வட்டிக்குச் செக் அனுப்பிடுவான். இருபத்து நாலு பர்சன்ட். இப்போ நீங்க ஆயிரம் போட்டீங்கன்னு ஒரு வருஷத்திலே ஆயிரத்தி நூற்றைம்பது. கால் பங்கு கூடுதலா வருது. இரண்டு வருஷம்னு முப்பது பர்சண்ட் தர்றன்.''

''அது சரி, வட்டிக்கு ஆசைப்பட்டு முதல் போயிடறதே?''

''முதல் எங்கே போச்சு? வேறு எங்கேயோ அவனுக்குத் தரவேண்டிய கம்பெனி கொஞ்சம் டிலே பண்ணியிருக்கு. இப்போ சரி பண்ணிட்டாங்க. ரிசர்வ் பாங்கிலே இவனையும் கவனிக்கத்தானே செய்யறுங்க?''

''அதெல்லாம் சும்மா. இங்கே பார்ரா வேணு! அதிக வட்டி கிடைக்கறதுன்னு பணத்தைப் போட்டுட்டு ராத்திரியெல்லாம் திக்குத் திக்குனு இருக்கிறதுக்குப் பேசாமல் கவர்மெண்ட் பாங்க்கிலே எதிலயாவது போட்டுட்டு அக்கடான்னு இரு..''

இரண்டு மாதம் கழித்து ஒரு நாள் காரியாலயத்திலிருந்து திரும்பிய குருபாதத்தின் முகம் பேயடித்தாற் போலிருந்தது.

''ஏன் ஒரு மாதிரியாயிருக்கீங்க?'' என்றுள் அவன் மனைவி.

மென்று விழுங்கிக் கொண்டு பத்திரிகையைக் காட்டினன்.

எஸ்.எம்.கே. சிட்பண்டு மூடப்பட்டது. பணம் போட்டவர்கள் தவிப்பு.

''நல்ல வேளை!'' என்றுள் அவள் நிம்மதியுடன். ''நீங்க அன்றைக்குச் சமயத்திலே வேணுகிட்டே சொன்னது நல்லதாப் போச்சு. மறு வாரம் மெச்சூர் ஆனதும் அப்படியே நாலாயிரத்தையும் வாங்கி, 'அத்திம்பேர் சொன்னுப்பலே பாங்கியில் போட போறேன்'ன்னு பாங்கியில் பிக்ஸட் டிபாஸிட் பண்ணிட்டான். என்ன இருந்தாலும் உங்க யோசனையே யோசனை.''

குருபாதம் முகம் கடுகடுத்தது. வாடியது. ஈன சுரத்துடன், ''உன் தம்பிக்குப் புத்தி சொன்னேன். ஆனல் பலன் சொன்ன பல்லி கதவிடுக்கிலே மாட்டிட்டுச் செத்த மாதிரி ஆயிட்டுது என் கதை.''

''என்ன சொல்றீங்க?''

''என்னவோ வட்டி கிட்டின்னு பெரிசாச் சொன்னனே, நல்லாத்தானே இருக்கும் போலிருக்குன்னு ஒரு ரெண்டாயிரத்தைப் போட்டுத் தொலைச்சேன். அந்த எஸ்.எம்.கே. சிட் பண்டுலே!''

''லட்சணம்தான். அவன் மனசை மாற்றுகிறதுக்கு அழகா பாயிண்ட்டெல்லாம் சொன்னீங்க. அவன் சொன்ன பாயிண்ட்டெல்லாம் உங்க மனசை மாத்திட்டாப்பலேருக்கு!''

'எஸ்.வி.'

# கடைசி பர்ஸ்



வீட்டுக்குள் நுழைந்ததுமே, ''ராணி! ராணி!'' என்று அவசரமாகத் தங்கையை அழைத்தான் கோபால்.

''ராணி, நீ உன்கூட வேலை செய்யற சேகரைக் கல்யாணம் பண்ணிக்க ஆசைப்படறதா சொன்னே. அவன் வீட்டிலே கல்யாணச் செலவுக்கு அஞ்சாயிரம் ரூபா கேட்டதாகச் சொன்னே, இல்லையா? எத்தனையோ பாடுபட்டுப் பணம் சேர்த்தேன். உனக்கு வேண்டிய பணம் இன்னியோட சேர்ந்திடுச்சு. நான் இதுவரை சேர்த்த பணம் அதோ அந்தப் பெட்டியிலேதான் இருக்கு. இந்தா சாவி. இந்தப் பர்ஸில் இருநூறு ரூபா சொச்சம் இருக்கு. இதையும் சேர்த்தா அவங்க கேட்ட பணம் வந்துடும். கொடுத்திட்டு உனக்கு அவனையே கல்யாணம் பண்ணி வைக்கப் போறேன்.''

''அண்ணா, நான் சேகரைக் கல்யாணம் பண்ணிக் கொள்வதாய் இல்லை.''

''என்ன! ஏன் அப்படி?''

''அண்ணா, என் கல்யாணத்துக்குப் பணம் சேர்க்க நீங்கள் எப்படியெல்லாம் கஷ்டப்பட்டு, பாடுபட்டு உழைத்துச் சம்பாதித்தீர்கள்! ஆனால் சேகர்..... அவர் யோக்கியமானவர் என்று நினைத்ததெல்லாம் ரொம்பத் தப்பு. அவர் எந்த வேலையிலும் இல்லை. ஜேபடி செய்துதான் டாம்பீகமாய் வாழ்கிறார் என்று தெரிந்தது. உங்களுடன் நான் வாழ முடியாது என்று அவரிடமே சொல்லிவிட்டேன்! ஆம் அண்ணா. அந்த வாழ்க்கை எனக்கு வேண்டாம்.''

கோபால் கூனிக் குறுகிப் போய் அமர்ந்துவிட்டான். அவன் கண் கலங்கியது.

''அண்ணா, நான் செய்தது தப்பா அண்ணா?'' கலக்கத்துடன் கேட்டாள்.

''இல்லை ராணி. நான்தான் தப்பு செய்துவிட்டேன். காதலித்தவன் ஜேபடிக்காரன் என்பதையே தாங்கிக் கொள்ள முடியாத நீ, உன்கூடப் பிறந்தவனும் அப்படித்தான் என்று தெரிந்தால்....''

''அண்ணா!''

''வேறு வழியில்லாமல் நான் உன் கல்யாணத்துக்காகப் பணம் சேர்த்ததும் ஜேபடியில்தான்.... ராணி, என்னை மன்னித்து விடு. இந்த நிமிஷமே இந்தப் பணத்தையெல்லாம் ஏதாவது கோவில் உண்டியலில் போட்டுவிட்டு, யோக்கியமாய் உழைத்து, மூட்டை தூக்கியோ வண்டி இழுத்தோ பணம் சேர்த்துத்தான் உன் கல்யாணத்தை நடத்துவேன். இது சத்தியம்.''

யாரோ பலக்கக் கை தட்டினார்கள். திரும்பிப் பார்த்தான்.

சேகர்!

''நீங்கள் உழைத்துச் சம்பாதிக்கப் போவது பற்றி ரொம்ப சந்தோஷம். ஆனால் அதுவரை உங்கள் தங்கை காத்திருக்க வேண்டாம். எந்தப் பணமும் கேட்காமல் அவளை நானே கல்யாணம் செய்து கொள்கிறேன்.... வேறு மாப்பிள்ளை தேட வேண்டாம்!'' என்றான் அவன்.

கோபாலுக்கு ஒரே திகைப்பு. ''அப்படியானால் ராணி சொன்னது....''

''உங்கள் வாயாலேயே உங்கள் குற்றம் வெளிப்பட வேண்டுமென்றுதான் இத்தனை நாடகமும்! நீங்கள் ஜேபடி செய்ததை நான்தான் அவளிடம் சொன்னேன். அந்தப் பஸ் கூட்டத்தில் நீங்கள் என் பர்ஸைப் பார்த்தீர்களே தவிர, என்னைப் பார்க்கவில்லை. ஆனால் நான் உங்களைக் கவனித்துவிட்டேன். நீங்கள் ஜேபடி செய்த பர்ஸ் என்னுடையதுதான்.''

'தணிகை'



# வாரிசுதாரர்

'முகவை ராஜா'

"சீமாச்சு!"

திரும்பிப் பார்த்தேன். வக்கீல் வராகசாமி. என் ஊர்க்காரர்.

"அடடே, நீங்களா! எங்கே இப்படி?"

"இங்கே என் உறவினர் பையனுக்குத் திருமணம். நீ இங்கேதான் இருக்கிறாயா?

"ஆமாம். இங்கே வந்து இரண்டு வருடமாகிறது. ஊரில் எல்லோரும் சவுக்கியம்தானே?"

"சவுக்கியம்தான். உனக்கு விஷயம் தெரியுமா? உன் பெரியப்பா இறந்துவிட்டாரே."

"தெரியாது," என்றேன். பெரியப்பாவுக்கும் எனக்கும் பேச்சு வார்த்தை கிடையாது.

"உன் பெரியப்பா எட்டாயிரம் ரூபாயைப் பாங்கில் போட்டிருக்கிறார். உன் பெரியப்பாவுக்குத்தான் சொந்தம் என்று சொல்லிக்கொள்ள யாருமே இல்லையே. நீ மட்டும்தானே. உனக்கும், அவருக்கும் பேச்சு வார்த்தை கிடையாது. உன்னை அவருடைய வாரிசுதார் என்று நிரூபித்து அந்த எட்டாயிரம் ரூபாயை உனக்கு வாங்கித் தருகிறேன். எனக்கு பீஸ் ஆயிரம் ரூபாய் கொடுத்துவிடு..."

நாய் விற்ற காசு குலைக்கவா செய்யும்? மனப்பூர்வமாக மகிழ்ச்சியுடன் சம்மதித்தேன்.

வக்கீல் வராகசாமி நான்தான் அவருடைய வாரிசு என்பதை நிரூபித்து எனக்கு அந்த எட்டாயிரம் ரூபாயை வாங்கித் தந்து தன் பீஸ் ஆயிரம் ரூபாயை வாங்கிப் போனார்.

ஒரு வாரம் கழிந்தது.

ஒரு ரிஜிஸ்தர் தபால் எனக்கு வந்தது. கையெழுத்துப் போட்டு வாங்கிப் படித்தேன்.

அய்யா,

திரு. நாராயணன் என்பவர் பஞ்சாயத்துத் தலைவராக இருந்தபோது இருபதாயிரம் ரூபாய் கையாடிவிட்டதாகத் தணிக்கையில் தெரியவருகிறது. அவருடைய சட்டபூர்வமான வாரிசுதார் தாங்கள்தான் என்பது தெரியவருவதால் மேற்கண்ட தொகையை இது கிடைத்த பதினைந்து நாட்களுக்குள் செலுத்த வேண்டியது. தவறினால் அவருடைய வாரிசுதாராகிய தங்கள் மேல் சட்டப்படி கோர்ட் மூலமாக நடவடிக்கை எடுக்க நேரிடும் என்பதைத் தெரியப்படுத்தப்படுகிறது.

ஆணையாளர்

# விலைவாசி



''நல்லெண்ணெய் ஒரு கிலோ, காப்பிப் பொடி அரைக் கிலோ, சர்க்கரை இரண்டு கிலோ, சோப்பு 3, மிளகாய் வற்றல் இருநூறு கிராம், தனியா நூறு, பெருங்காய பாக்கெட் ஒண்ணு....''

மளிகை கொண்டு வந்த பையன் பெட்டியிலிருந்து சமான்களைப் பட்டியல் படி எடுத்து வைத்தான். சரி பார்த்து வாங்கி வைத்துக் கொண்டிருந்த யசோதா அவசரப்பட்டாள்.

''அப்பா வர்றதுக்குள்ளே சீக்கிரம் எடுத்து வை தம்பி. வந்து விட்டார்னு அப்புறம் வம்பு.''

அவள் சொல்லிக் கொண்டிருந்த போதே சடகோபன் காப்பியை ஆற்றிய வாறு மெதுவாக வந்துவிட்டார்.

''என்னப்பா தம்பி, நல்லெண்ணெய் விசை என்ன போடறே? நல்ல செக்கு எண்ணெய்தானே?''

பையன் முகத்தில் ஒருவிதமான புன்முறுவல் படர்ந்தது. ''அசல் நல்லெண்ணெய்தாங்க. விசை ஏழரையணு.''

''எல்லா இடத்திலேயும் ஏழணு தானே? கொள்ளை அடிக்கிறீங்க. சரி, சரி. அஸ்கா எப்படி?''

''அஸ்காங்களா? விசை ஆறணுங்க.''

''ரொம்ப லட்சணம்தான். எல்லாம் அஞ்சரையணு போட்டுக்க. இந்தாம்மா யசோதா, அஞ்சரையணுவுக்கு மேலே தராதே. ஆமாம், சோப்பு என்ன விலை?''

யசோதா குறுக்கிட்டு, ''அப்பா, நீங்க காப்பி சாப்பிட்டுட்டுக் குளிக்கப் போங்க.''

''மளிகைக்காரனுக்குப் பணம் தந்துட்டுப் போறேம்மா. எல்லாம் எவ்வளவுப்பா ஆச்சு?''

''ரெண்டு ரூபா, மூணணு, நாலு தம்பிடி.''

''அது என்ன மூணணு நாலு தம்பிடி? எல்லாம் முழுசா ரெண்டு ரூபா வாங்கிக்க.''

உள்ளே போய்ப் பீரோவைத் திறந்து இரண்டு ரூபாய் எடுத்து வந்து தந்தார்.

''நான் வர்ரேங்க,'' என்று சொல்லிக் கடைப் பையன் மரியாதை யுடன் இரண்டு ரூபாயை வாங்கிக் கொண்டு வெளியே சென்று கேட் அருகே காத்திருந்தான்.

சடகோபன் குளிக்கப் போனதும் யசோதா வெளியே வந்து பையனிடம் நூற்றைம்பத்தேழு ரூபாய் எண்ணித் தந்து விட்டு, ''ரொம்ப தாங்க்ஸ் தம்பி. இந்தா உனக்கு இனும் ஒரு ரூபாய்!'' என்று தந்தாள்.

''வேண்டாங்கம்மா.''

''இல்லே பரவாயில்லே. வெச்சுக்கோ. ஒரோரு தரமும் நீ பாவம் சாமர்த்தியமாக என் அப்பாவுக்குத் தகுந்த படி பேசுகிறாயே.''

''இதுக்குப் போய் இனும் எதுக்குங்க? என்னவோ பாவம் பெரியவரு புத்தி சரியில்லே. விலைவாசியெல்லாம் முப்பது வருஷத்துக்கு முந்தி எப்படி இருந்ததோ அதையே இன்னைக்கும் நினைச்சிட்டிருக்காரு. நீங்க அப்பா மனசுப் படியே பொறுமையாக இத்தனை வருஷமா தினமும் நடிச்சிட்டிருக்கீங்களே. நான் என்னங்க, வாரத்துக்கு ஒரு நாள் சாமான் கொண்டு வந்து போட்டுட்டுப் போறவன்.''

யசோதாவுக்கு ஆறுதலாயிருந்தது.

'யோகேஷ்'

# எட்டி உதைக்கணும்!



கால் பந்து விளையாட்டு சுறுசுறுப்பாய் நடந்து கொண்டிருந்தது. ஐதராபாத் அணியோடு சென்னை அணி மோதும் பெரிய விளையாட்டு.

அதனால் காலரியிலும் மேடையிலும் பார்வையாளர்கள் திரண்டு அடைந்திருந்தார்கள். விளையாடுகிறவர்களை உற்சாகப்படுத்தியும் தப்பு விளையாட்டு ஆடினால் கண்டித்தும் கலாட்டா செய்தும் ஒரே இரைச்சல்.

காலரியில் நடுவில் உட்கார்ந்திருந்த ஒரு நடுத்தர வயது ஆசாமியின் குரல் மற்றக் குரல்களைக் காட்டிலும் தூக்கலாய் இருந்தது. பரமானந்த் என்ற பெயருள்ள அவர் கால் பந்து விளையாட்டைப் பற்றி நன்றாகத் தெரிந்து வைத்திருந்தார். அடிக்கடி உற்சாகமாய்க் கூவிக் கொண்டிருந்தார்.

''பாருங்க அந்த ரைட் விங்கிலே வேணும்னே ஃபவுல் பண்ணிட்டிருக்கான். அவனை எட்டி உதைச்சு வெளியே துரத்துங்கப்பா!'' பரமானந்த் ஓங்கிக் குரல் கொடுத்தார்.

அவரைத் தொடர்ந்து, ''அந்த ஆளை வெளியே அனுப்பு. சப்ஸ்டிட்யூட்டைப் போடு,'' என்று மற்றவர்கள் கத்தினார்கள்.

ஆட்டம் தொடர்ந்து நடந்தது.

''என்னய்யா ஆள் இவன்! கார்னர் ஷாட் என்னமா வருது. அந்த சென்ட்டர் ஃபார்வார்டு ஹெட் கிக் கொடுத்திருக்கக் கூடாது? சோமாறி. எங்கியோ காக்காய் ஓட்டினு நிக்கறான். எட்டி உதைக்கணும்யா அவனை.'' பரமானந்த் கூச்சல் போட்டார்.

''சோமாறி டாய்.... போடா வெளியே.'' கூட்டம் ஜால்ரா போட்டது.

''காப்டன் மோசம்யா. ஸெல்ஃபிஷ் கேம் ஆடறான். யோவ், குடுத்து எடுத்து ஆடறையா, உதைக்கட்டுமா?'' பரமானந்த் போட்ட அதட்டல், காப்டனுக்கே எட்டிவிட்டது போலும். அவர் அதற்குப் பிறகு பணிவாய் ஒழுங்காய்ப் பந்தை அடுத்தவருக்குப் பாஸ் ஆன் பண்ணி விளையாட ஆரம்பித்தார்.

ஒருவழியாய் ஆட்டம் முடிந்தது. சென்னை அணிக்கு வெற்றி.

அந்த உற்சாகத்தில் வெற்றிக் கோஷமிட்டுக் கொண்டு கூட்டம் கலைந்து சென்றது. எல்லோரும் மைதானத்தை விட்டு வெளியேறிவிட்டார்கள்.

காலரியில் ஒரே ஒருவர் மட்டும் இருந்த இடத்தைவிட்டு அசையாமல் உட்கார்ந்திருந்தார். பரமானந்த்.

யாரையோ எதிர்பார்த்துக் காத்திருப்பவர் போல் வழி பார்த்துக் கொண்டிருந்தார். கேட்டில் பிளஸ் டூ மாணவன் போல் ஒருவன் எட்டிப் பார்த்ததும், ''டேய் ரகு, நான் இங்கே இருக்கேன்,'' என்று குரல் கொடுத்தார்.

''இதோ வந்துட்டேன் சித்தப்பா.'' காலரியில் வேகமாய் ஏறி அவர் அருகில் வந்தான் ரகு. ''நான் வந்த பஸ் நடுவிலே பிரேக்டவுன் ஆயிட்டது சித்தப்பா. வேற பஸ் பிடிச்சு வர லேட் டாயிட்டுது.'' மன்னிப்புக் கோரும் தோரணையில் கேட்டுக் கொண்டான்.

''ஹூம்.... எத்தனை நேரம் காத்திருக்கிறது!'' பெருமூச்சுடன் பின்புறம் பார்த்தார் அவர்.

பின்புறமிருந்த தாங்குக் கட்டைகளை எடுத்துக் கொடுத்தான் ரகு. அவற்றைக் காலரி படியில் ஊன்றி, தன் ஒற்றைக் காலால் எழுந்து நின்றார் பரமானந்த்.

''பார்த்து இறங்குங்க சித்தப்பா!'' ஒரு கால் இழந்த அவரைத் தாங்கிக் கொண்டு மெள்ள இறக்கி விட்டான் ரகு.

**'தணிகை'**

"பத்மா, தூக்கமே வரல்லே. ஒரு கதை சொல்லேன்."

"ஸ், சும்மா இருங்க. குழந்தை முழிச்சிட்டிருக்கான்."

"உனக்கு எப்படித் தெரியும்?"

"புரள்றானில்லே? சரி, கம்முனு தூங்குங்க."

"அப்ப நான் கதை சொல்றேன், நீ தூங்கு."

"விட மாட்டீங்களே!"

"ஒரு ஊரில் நிரஞ்சன்னு ஒரு இளைஞன்....."

"ஐய, ஆரம்பிச்சிட்டீங்களா சுயப் பிரதாபம்!"

"நிரஞ்சன்னு உலகத்திலேயே நான் ஒருத்தன்தானா? கேளு. பட்டதாரித் தொகுதி தேர்தல்லாம் நடந்ததில்லே, அதுக்கு இரண்டு மாசம் முன்னாலே அவன் ஒரு வீட்டுக்குப் போனான். அங்கே பத்மா பத்மான்னு ஒரு பொண்ணு. ரொம்ப அழகானவள்...."

"வேண்டாங்க. ஏதாச்சும் அசிங்கம் அசிங்கமா கதை ஆரம்பிப்பீங்க. குழந்தை முழிச்சிட்டிருக்கான்."

"அசிங்கமென்ன இதிலே? அந்த நிரஞ்சன், பத்மாகிட்டே, 'வாக்காளர் பட்டியல்லே உங்க பெயர் இருக்கான்னு விசாரிக்க வந்திருக்கிறேன்,'னு சொல்லி, எல்லா விவரமும் விசாரிச்சுக்கிட்டான். 'இங்கே ஒரு கையெழுத்துப் போடுங்க'ன்னு பேனாவையும் காகிதத்தையும் நீட்டினான். அவள் கையெழுத்துப் போடப் பார்த்தாள். மசி இல்லே...."

"போதும், நிறுத்துங்க. குழந்தை முழிச்சிட்டிருக்கான். அவன் காதிலே இதெல்லாம் விழலாமா?"

"கொஞ்சம்தான் பாக்கி. அவன் பேனாவை வாங்கி உதறினான். அவள் கைமேலே தெறிச்சிட்டது. உடனே ஸாரின்னு சொல்லி கர்ச்சிப்பால் துடைக்கவிட்டான. அவள் முகம் வெட்கத்திலே குங்குமமாய்ச் சிவந்து போச்சு."

"ரைட். கதை முடிஞ்சது. கத்தரிக்காய் காய்ச்சுது. சமர்த்தாய்த் தூங்குங்க."

"எப்படி முடியும் அதுக்குள்ளே? அப்புறம் அவன் எலக்‌ஷன் பிரசாரம்,



# பக்கத்தில் பத்மா

கேன்வாஸிங்குன்னு ஏதாவது சொல்லி, தினம் தினம் பத்மாவைப் பார்க்க வர ஆரம்பிச்சான். ஒரு நாள் எதிர் வீட்டுப் போர்வழியொருத்தர், இவங்க பேசிட்டிருக்கிறப்போ வந்து, 'நீங்க யாருக்கு ஓர்க் பண்ணறீங்க?'ன்னு கேட்டார். அவன் உடனே 'அபிராம சோமுர்'ன்னு சொன்னான். 'பெயரே கேள்விப்பட்டதாயில்லையே? அப்படி ஒருத்தர் இந்த கிராஜுவேட் தொகுதியில் நிற்கிறதாயும் தெரியவில்லையே?'ன்னு சொன்னதும் இவன் குட்டு உடைஞ்சு போச்சு. பத்மாவுக்கும் புரிஞ்சு போச்சு. தன்னைப் பார்க்கத்தான் அவன் பொய் சொல்லிக்கிட்டு வந்தான்னு தெரிஞ்சதும், காதல் ஏற்பட்டு...."

"ரைட் ரைட் ரைட்! இரண்டு பேரும் கல்யாணம் பண்ணிக்கிட்டு இப்ப சவுக்கியமாக படுத்துட்டிருக்காங்க. தூங்கப் போறாங்க. குழந்தை கேட்கப் போறானேன்னு கொஞ்சம் கூடக் கூச்சமில்லாமல்...."

"குழந்தை ஒண்ணும் கேட்க மாட்டான். அவன்தான் பத்மாவோட வயத்துக்குள்ளேயே பத்திரமாயிருக்கானே! இன்னும் அஞ்சு மாசம் கழிச்சு வெளியே வந்தப்புறம்தான் கேட்பான்!"

சொக்கி

# துணை தேவையில்லை





சுகந்தி

கட்டுக்கட்டாய்ப் பையிலிருந்து வெளியே எடுத்து வைத்தார். அனந்தராமன் கல்யாண அழைப்பிதழ்களை. மனைவி பூரணியைப் பார்த்துச் சிரித்து, ஒரு கட்டை அவிழ்த்து ஒன்றை எடுத்து அவளிடம் நீட்டினார்.

''சொன்னபடியே செய்துவிட்டேன்!'' என்றார்.

''என்ன இருந்தாலும் நம் வீட்டில் முதல் கல்யாணம்... இப்படி நீங்கள் உங்கள் அண்ணாவுக்கு மரியாதை தராமல்... என்னவோ என் மனசுக்குச் சமாதானமில்லை...'' என்றாள் பூரணி.

அவர்களுடைய பெண் பிரேமாவுக்குக் கல்யாணம் நிச்சயமாயிருந்தது. நகைகள் செய்வதில், துணிமணிகள் எடுப்பதில், பாத்திரங்கள் வாங்குவதில், சமையல், டிபன், 'மெனு' போடுவதில்— இப்படி எவ்வளவோ காரியங்களில் தன்னைக் கலந்தாலோசித்து, தான் சொல்கிறபடியே செய்த கணவர், கல்யாண அழைப்பிதழ் அச்சடிப்பதில் மட்டும் தன்னிச்சையாகச் செயல்பட்டது பிடிக்கவில்லை.

குடும்பத்தில் பெரிய மனிதர் என்று சொல்லிக் கொள்ள அனந்தராமனின் அண்ணா ஒருவர்தான் இருந்தார். நல்ல நிலையிலும் இருந்தார்.

அனந்தராமன் எப்போதாவது ரொம்ப நெருக்கடியாக இருந்தால் அண்ணாவிடம் போவார். தயங்கித் தயங்கிக் கேட்பார். ஆனால் அந்த மனிதர் சுபாவத்தில் கஞ்சன். இல்லாத பஞ்சப் பாட்டுப் பாடி, ஆயிரத்தெட்டு நோய் நொடிகளைச் சொல்லி, ஒரு காசு கூடக் கொடுக்காமல் திருப்பி அனுப்பிவிடுவார் தம்பியை.

ஆகவே, அனந்தராமனுக்கு அவர்மீது மிகவும் கோபம். திருமண அழைப்பிதழை அண்ணா பெயரில் போடாமல் தன் பெயரிலேயே அச்சடித்தார்.

அது மரியாதையில்லை என்று பூரணி எவ்வளவோ சொல்லிப் பார்த்தாள். கேட்கவில்லை.

''தம்பி கஷ்டப்படுகிறானே என்று கொஞ்சமாவது இரக்கம் காட்டிய துண்டா அவன்? அவன் உறவே வேண்டாம். கல்யாண அழைப்பிதழில் ஓர் இடத்தில்கூட அவன் பெயர் வரக் கூடாது!'' என்று சொன்னவர், அதன்படியே செய்தும்விட்டார்.

அழைப்பிதழைப் பார்த்துக் கொண்டேயிருந்த பூரணி திடீரென்று சிரித்தாள்.

''உங்க அண்ணா பெயர் கல்யாண அழைப்பிதழ்லே வரவே கூடாதுன்னு அவ்வளவு பிடிவாதம் செய்துவிட்டு அவர் பெயரை முதல் வாக்கியத்திலேயே அடிச்சிருக்கிங்களே?''

''என்ன சொல்றே?'' என்று திகைத்தவர், அவள் காட்டிய இடத்தைக் கவனித்தார்.

அழைப்பிதழின் தலைப்பில் 'வெங்கடாசலபதி துணை' என்று போட்டிருந்தது.

அவருடைய அண்ணா பெயர் வெங்கடாசலபதி!




# அவரால் முடியாது

எஸ். குமார்

விஜயசுந்தரம் படுக்கையில் அயர்ந்து கிடந்தார்.

பக்கத்தில் அவருக்கு உதவியாக சக்கர நாற்காலி நிறுத்தப்பட்டிருந்தது.

பாரிசவாயுவால் பாதிக்கப்பட்ட நாள் முதலாக அவருக்கு அதுதான் நண்பன்.

உடனிருந்து கவனிக்கவேண்டிய மீனு - அவர் மனைவி - ஒய்யாரமாக மாடியில் இருக்கிறாள்.

இந்நேரம் -

வீடியோ பார்த்துக்கொண்டிருப்பாள்.

தங்க மீன்களுடன் விளையாடிக் கொண்டிருப்பாள்.

இல்லையென்றால் -

ஆனந்தமாக தூங்கிக் கொண்டிருப்பாள்.

"குட் மார்னிங், மிஸ்டர் விஜய்!" டாக்டர் உள்ளே பிரவேசித்தார்

பதிலுக்கு குட்மார்னிங் சொல்லவில்லை.

கோபத்தை வெளிப்படுத்த அவருக்கிருந்த ஒரே வழி அதுதான்.

"மருந்தெல்லாம் ஒழுங்கா சாப்பிடறீங்களா?"

"ம்" என்றார் எரிச்சலுடன்.

டாக்டரும் அதற்குமேல் எதுவும் விசாரிக்காமல் மாடியை நோக்கி நடந்தார்.

சற்று நேரத்தில் மீனுவும் அவரும் குலுங்கிக் குலுங்கிச் சிரித்தார்கள்

அவரால் என்ன செய்ய முடியுமென்ற தைரியம்தான்!

உண்மைதான்!

இனி-

மனைவியைச் சந்தோஷப்படுத்த அவரால் முடியாது.

டாக்டரை - நிறுத்த அவரால் முடியாது.

துரோகம் செய்யும் மனைவியையும் டாக்டரையும் தண்டிக்க அவரால் முடியாது.

நினைத்தபோதே நெஞ்சம் கொதித்தது.

இப்படியொரு வாழ்க்கை தேவையா?

ஃபோன் ஒலித்தது.

எடுத்தார்.

"டாக்டர் அங்கே இருக்காரா?"

"இருக்கார். நீங்க யார்?"

"நான் அவரோட ஒய்ஃப் பேசறேன். இன்னிக்கு ஈவ்னிங் ஒரு முக்கியமான ஃபங்ஷன் இருக்கு. அவரைக் கொஞ்சம் சீக்கிரம் வரச் சொல்லுங்களேன்."

"அவர் வர்ற மாதிரி இல்லே. ஹீ இஸ் ஸம்லாட் பிஸி."

"வர்ற மாதிரி இல்லையா? ஒகே, நானே அங்கே வரேன்."

"வெல்கம்."

ரிசீவரை வைத்தார்.

சற்று நேரத்தில் வாசலில் ஒரு சைக்கிள் நின்றது.

வந்தவள் அவரிடம், "நீங்கதானே ஃபோன்ல பேசினது?" என்று கேட்டாள்.

"ஆமாம்."

"டாக்டர் எங்கே?"

"மாடியிலே இருக்கார்."

மாடியை நோக்கி நகரப் போனவளைச் சற்று நிறுத்தினார்.

"ஒன் மினிட்... மாடியில ஸ்டோர் ரூம் இருக்கு. நீங்க திரும்பி வரும்போது எனக்காக கொஞ்சம் ப்ரெட்டும் பட்டரும் கொண்டுவர முடியுமா? ப்ளீஸ்..."

கத்தியை அவளிடம் நீட்டினார்.

அவள் வேண்டா வெறுப்பாக வாங்கிக்கொண்டு மாடியை நோக்கி நடந்தாள்.

சற்று நேரத்தில் -

மாடியிலிருந்து, அவரது மனைவியின் அலறலும், டாக்டரின் அலறலும் கேட்டன.

அவர் ரிசீவரை எடுத்து, போலீசுக்கு டயல் செய்தார்.



# ஜல தோஷம்

என் கணவரின் காரியாலயத்தில் நண்பர்கள் எல்லோரும் வருடாந்திர பாஸில் காஷ்மீர் சுற்றுப் பயணம் புறப்பட்டார்கள். "நீ தனியாக இருக்க வேண்டாம். சேலத்தில் உன் அண்ணா வீட்டில் போய் நான் வரும் பத்து நாள் வரை இரேன்," என்றார்.

நான் வந்ததில் அண்ணாவுக்கும், அண்ணாவைவிட மன்னிக்கும் ரொம்ப சந்தோஷம். ஆனால் மன்னிக்குத்தான் பாவம் பயங்கரமான ஜலதோஷம்.

"உங்க மன்னிக்கு நானும் பண்ணாத வைத்தியமில்லே மாலா. ஸைனஸ் டிரபிள். எல்லாம் தானாப் பண்ணிக்கிறது. ஒரு நாளைக்கு மூணு நாலு தடவை தலைக்கு ஸ்நானம் பண்ணினால் ஜலதோஷம் வருமா வராதா? பிடிவாதமாகக் குளிக்கிறாள்."

"ஏன் அப்படி மூணு நாலு தடவை குளிக்கிறீங்க?" என்றேன் மன்னியிடம்.

அண்ணா முந்திக்கொண்டு பதில் சொன்னார். "மடி, ஆசாரம்.' இந்த வயசுக்கு இதெல்லாம் வேணுமா, நீயே புத்தி சொல்லு." அண்ணா கோர்ட்டுக்குப் போய்விட்டார்.

மத்தியானம் மாட்டினி சினிமாவுக்கு மன்னியுடன் போக எனக்கு ஆசையாயிருந்தது. தயக்கத்துடன், "மன்னி, போரடிக்கிறது. மத்தியானம் ஏதாவது ஷோ போகலாமா? மடி ஆசாரம், என்று வரமாட்டாயா?" என்றேன்.

மன்னி சிரித்து, "அதெல்லாமில்லே நீ வா, போகலாம்," என்றாள். போய் வந்தோம். 'சரி, வீட்டுக்கு வந்து தலையில் தண்ணீரைக் கொட்டிக் கொள்ளப் போகிறாள்,' என்று நினைத்துக் கொண்டேன். மன்னி குளிக்கவில்லை.

சாயந்தரம் வேலைக்காரியிடம் மன்னி, "எல்லம்மா, நீ பாட்டுக்குப் போய் விடாதே, தோசைக்கு நீதான் மாவாட்டித் தரணும். நான் மாலாவோடு கோவிலுக்குப் போனாலும் போவேன்," என்றாள்.

எனக்கு அதிர்ச்சி.

கோவிலுக்குப் போகும்போது மன்னியிடம் கேட்டேன். "ஏன் மன்னி, நீங்க தினமும் மூணு நாலு வேளை தலைக்கு ஸ்நானம் பண்ணுவீங்க ஆசாரம், மடின்னு அண்ணா சொன்னாரே. அப்படி ஒண்ணும் ஆசாரமாகத் தெரியலையே? வேலைக்காரியை மாவாட்டித் தரச் சொல்கிறே?" என்றேன்.

மன்னி ஒரு மாதிரி சிரித்தாள்.

"சொல்றதுக்கே கூச்சமாக இருக்கு மாலா. உங்க அண்ணா சைசுபட்டவர் இல்லே. அவருக்கு நான் ரொம்ப வேணும். ராத்திரி பேசிட்டோமா, அத்தோடு சரி என்கிற விவகாரம் இல்லை. காலையில் குளித்து முடித்துப் பளபளன்னு நான் இருந்தால் போதும். 'ஆகா! என்ன ஃபிரஷ்ஷா இருக்கே,' என்று பிடித்துக் கொண்டு விடுவார். அப்புறமா கோர்ட்டிலிருந்து மத்தியானம் சாப்பிட வர்றாரா? சாப்பிட்டு ஓய்வாகப் படுக்கிறாரா, அப்போதும் குஷி கிளம்பி விடும். சாயந்தரம் அவர் வர்றப்போ பளிச்சினு இருப்பேனா? அப்போதும் பிடித்துக் கொண்டு விடுவார். அப்புறம் ராத்திரிக்கு மேலே தப்பவே தப்பாது. என்னவோ அப்படி ஒரு இது அவருக்கு. ஒரொரு தடவையும் நீயே சொல்லு, எப்படி ஸ்நானம் செய்யாமலிருப்பது? என்ன இருந்தாலும் உடம்பு கூசற தில்லையா? இதுதாண்டியம்மா விவகாரம். எனக்கு ஸைனஸ் வராமல் என்ன பண்ணும்? இவ்வளவு ஆசையாயிருக்கிறவர் கிட்டே முரண்டு பண்ணித் தொலைச்சா, அவர் கவனம் வேறு எங்காவது திரும்பித் தொலைத்துடுதுன்னா, வம்பு. அதுக்கு இந்த ஜலதோஷத்தையே அனுபவிச்சுடலாமே."

மன்னியின் தும்மல் சாதாத் தும்மல் அல்ல, தியாகத் தும்மல் என்று புரிந்தது எனக்கு.

[illegible] சந்தர்



# அங்கேயும்.. இங்கேயும்..

## பூவண்ணன்

விஜயமங்கலத்திலிருந்து புறப்பட்டது முதல் புஷ்பாவைப் பற்றியே புகழ் பாடிக் கொண்டிருந்தாள் சமலம்.

கந்தசாமியின் ஏழை நண்பர் ரங்கண்ணு. சென்னையிலிருந்து கோவைக்குக் காரில் போய்க் கொண்டிருந்த போது விஜயமங்கலத்தில் ஒரு மணி நேரம் அவர் வீட்டில் தங்கியிருந்தது தான் கமலத்தின் புகழ் மாலைக்குக் காரணம்.

அவர்கள் வீட்டுச் சாப்பாட்டைக் கந்தசாமி சப்புக் கொட்டிச் சாப்பிட்டார். ஏன், கமலமும்தான் சுவைத்துச் சாப்பிட்டாள்.

''அந்த புஷ்பா படு சிக்கனங்க; எந்தப் பொருளும் சரியா இல்லே— ஆனாலும் சமையல் பிரமாதம். அந்தச் சமையல் முழுதுக்கும் ஒரு ஸ்பூன் அளவு எண்ணெய் கூட முழுசா செலவழிக்கலே. நம்ம வீட்டுச் சமையக்காரியும் இருக்கிறாளே, ஊதாரிச் சனியன்!...'' என்று கமலம் ஆரம்பித்த பேச்சு, கார் கோவைக்குள்— ஆர் எஸ் புரத்துக்குள்— கமலாலயம் பங்களாவுக்குள் நுழையும் வரை முடியவில்லை.

அன்றுமுதலே, புஷ்பாவைத் தன் வீட்டுச் சமையற்காரியாக்கிக் கொள்ள வேண்டும் என்று முயன்றாள் கமலம்மாள். அவள் தொந்தரவு பொறுக்க முடியாமல், கந்தசாமி ரங்கண்ணுவுக்குக் கடிதம் எழுதினார். மூன்று பெண்களும் இரண்டு பிள்ளைகளுமாக ஐந்து குழந்தையுடன் அவதிப்பட்ட ரங்கண்ணு, அடுத்த வாரமே புஷ்பாவை அழைத்து வந்து கமலத்திடம் ஒப்படைத்து விட்டுப் போய் விட்டார்.

புஷ்பா வந்து இரண்டு மாதம் ஆயிற்று. மளிகைச் சாமான்கள் வாங்கிய பில்லைக் கமலம் பார்வையிட்டாள். தூக்கி வாரிப் போட்டது. கடலை எண்ணெய் மட்டும் எட்டு கிலோ! இந்த வீட்டில் குழந்தைகளையும் சேர்த்து, சமையற்காரியையும் சேர்த்து மொத்தம் ஏழே பேர்! அதற்கா இவ்வளவு எண்ணெய்! பில்லை முழுதும் படித்தாள். கடுகு, மிளகு, சீரகம், பட்டை, லவங்கம்— எல்லாமே பழைய சமையற்காரி வாங்குகிற அளவுக்கு மேல் இருந்தது.

கமலம் ஆத்திரத்துடன் சமையலறைக்குள் நுழைந்தாள்.

''ஏண்டி புஷ்பா, உங்க வீட்டிலே ஒரு வேளை சமையலை ஒரு ஸ்பூன் எண்ணெயிலே முடிச்சே. இங்கே மட்டும் ஊதாரித் தனமா? மளிகைப் பட்டியலை இப்பதான் பார்த்தேன். பழைய சமையற்காரிக்கு மேலே நீ செலவழிக்கிறே! உன் சிக்கனத்தையெல்லாம் விஜயமங்கலத்திலேயே விட்டுட்டு வந்துட்டியா?'' என்று கத்தினாள்.

புஷ்பா தோசையைத் திருப்பிப் போட்டுவிட்டு, அதற்கு இன்னும் கொஞ்சம் எண்ணெய் ஊற்றி விட்டு நிதானமாகப் பதில் சொன்னாள்.

''இதோ பாருங்கம்மா! எங்க வீடு ஏழை வீடு. எப்பவும் எதுவும் இருக்காது. தொட்டுத் தொட்டுப் பார்த்து, தொடைச்சு தொடைச்சுச் சமையல் செஞ்சு அலுத்துப் போச்சு. அதனாலே பணக்காரங்களான உங்க வீட்டிலே சமையலுக்குக் கூப்பிட்டதும், ஏதோ தாராளமாகச் சமையல் செய்யலாமேன்னு சந்தோஷமாய் இங்கே வந்தேன். இங்கேயும் தொட்டுத் தொட்டுப் பார்த்துச் சிக்கனமாத்தான் செய்யணும்னு நான் எங்க வீட்டுக்கே போயிடறேன்.''

கமலம்மாள் சிலையானாள்.

"மீனு, உன்னுடைய அளவு ஜாக்கெட்டைக் கொடு. துணியையும் கொடு. நானே நீ தைத்துக் கொள்கிற டெய்லரிடம் கொண்டு போய்க் கொடுத்து விட்டு அப்படியே ஆபீஸ் போகிறேன்," என்று கேட்டான் சுகுமார்.

"ஐயே, அசிங்கம். எனக்கு நேருக்கு நேராய் டெய்லரிடமே அளவு கொடுத்தால்தான் பிடிக்கும். அதுவும் இப்போதெல்லாம் பழைய ஜாக்கெட் எதுவுமே சரியா இல்லே. புதுசாய் அளவு கொடுக்கணும்."

அவனுக்கு மட்டுமே சொந்தமான அழகை எவனோ கள்ளத் தனமாய்ப் பார்த்து ரசிப்பதை அவனால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. மனசுக்குள் பொருமிக் கொண்டிருந்தான். இரண்டொரு முறை ஜாடைமாடையாய்ச் சொல்லித் தடுக்கப் பார்த்தான். அவன் உணர்ச்சியைப் புரிந்து கொள்ள வில்லையோ, அல்லது புரிந்து கொண்டு வேண்டுமென்றேதான் அப்படி நடந்து கொள்கிறாளோ தெரியவில்லை. ஒரு புதுப் புடவை வாங்கினால் அதற்கு மாட்ச் பார்த்து இரண்டு ஜாக்கெட் பிட்டாவது எடுப்பதும் அளவு கொடுத்துவிட்டு வருகிறேன் என்று ஒரு முறையும் கொடுத்ததை வாங்கிவரப் போகிறேன் என்று இரண்டு முறையும் போய் வருவது மாய் இருந்தாள்.

அன்றைக்குச் சம்பள தினம். அவனுடைய நண்பன் ஒருவன், "சுகுமார், இது ஹாங்காங் ஷர்ட்டிங். எனக்கு ஒன்று எடுத்துக் கொண்டேன். உனக்கு நன்றாய் இருக்கும் என்று கொண்டு வந்தேன்," என்று அந்தச் சட்டைத் துணியை நீட்டிய போது அவனுக்குத் திடுதிப்பென்று அப்படியொரு குறுக்கு யோசனை பாய்ந்தது. வாங்கிக் கொண்டான்.

வீட்டுக்கு வந்த போது எதிர் பார்த்தபடியே, "உங்களுக்காகத்தான் காத்துக் கொண்டிருந்தேன்," என்று புறப்படத் தயாராய் இருந்தாள் மீனு.

"எங்கே?"

"டெய்லரிடம்தான். கொடுத்து இரண்டு வாரமாயிற்று. இன்றைக்கு ட்யூ டேட்."

"நானும் வருகிறேன்."

---

'சோட்டா'

---



# அளவு

"எங்கே?"

"உங்க டெய்லரிடம்தான்."

"எதுக்கு?"

"நான் ஒரு சட்டைக்கு அளவு கொடுக்க வேண்டும்," என்று துணியைக் காட்டினான்.

"என் டெய்லர் கிட்ட நீங்க அளவு கொடுக்கப் போறீங்களா?"

"கண்டிப்பா." முகத்தை உர்ரென்று வைத்துக் கொண்டு சொன்னான்.

"ஓகே. வாங்க."

கணவனைத் தலை குனிய வைக்கப் போகிறோம் என்ற நினைப்பில் உள்ளூரச் சிரித்துக் கொண்டே தன் தையல் கடைக்கு அழைத்துப் போனாள் மீனு.

அவளுக்கு ஒரே அதிர்ச்சி. அவளுடைய தையல் சிநேகிதி இருந்த இடத்தில் கல்லூரி மாணவன் போல் ஸ்டைலாக யாரோ ஒருத்தன்!

பெண்களே நடத்தி வந்த அந்தத் தையல் கடையை ஒரு வாரத்துக்கு முன்னால்தான் கட்டுப்படியாகாமல் வேறு ஆட்களுக்கு விற்றுவிட்டார்கள் என்ற விஷயம், பாவம், அவளுக்குத் தெரியாது.

# புது வசந்தம்...



என் மனைவி, மகனுடன் ஏற்காடு எக்ஸ்பிரஸில் ரிசர்வேஷன் செய்திருந்த 'பி' கம்பார்ட்மென்ட்டின் கூப்பேயில் ஏறி அமர்ந்தபோது, எக்ஸ்பிரஸ் புறப்பட இன்னும் அரை மணி நேரம் இருந்தது.

"ரொம்ப வியர்க்குதுங்க... ட்ரெயின் கிளம்பற வரைக்கும் அங்க உட்கார்ந்திருக்கேன்!" என்ற லட்சுமி, ரமேஷுடன் கூப்பேயை விட்டு வெளியேறி ஜன்னலோரமாய் அமர்ந்து கொண்டாள்.

சூட்கேஸ், மற்ற லக்கேஜ்களை வைப்பதில் நான் முனைந்தபோது, எதிர்பாராமல் ஒரு பெண் வந்து நின்றாள்.

"எக்ஸ்கியூஸ் மி சார்... நீங்க கொஞ்ச நேரம் கூப்பேயை விட்டு வெளியே இருக்க முடியுமா?" என்று குயிலாகக் கேட்டாள்.

இருபத்தைந்து வயதுக்குள்தானிருக்கும். தவிட்டு நிறம். கையில் ஒரு புடவையைத் தவிர, வேறு லக்கேஜ் எதுவுமில்லை. நான் அவளையே அதிக நேரம் பார்த்துக் கொண்டிருந்ததை நல்லவேளையாக லட்சுமி கவனிக்கவில்லை. "ஏம்மா... எதுக்காக நா வெளியேறணும்?" என்று குரலில் கடுமையைச் செயற்கையாய் வரவழைத்துக் கேட்டேன்.

"ஒண்ணுமில்லீங்க... இந்தப் புடவையைக் கொஞ்சம் மாத்திக்கணும்.. ப்ளீஸ்.." என்று நாணிக் குழைந்தாள்

"புடவையை மாத்திக்க இந்த இடந்தானா கிடைச்சுது...? டாய்லெட்லே மாத்திக்கலாமே?"

"இல்லே சார்... அங்க தண்ணி ஊத்தி ஒரே அசிங்கமா கெடக்குது... அதுல மாத்தினா புடவை அழுக்காய்டும்..."

இதற்கு மேல் கேள்விகள் கேட்பது மனிதாபிமானமல்ல என்று வெளியே வந்த நான், "புடவை மாத்திக்கிற இடத்தைப் பார்த்தியா...! இதுதாண்டி மெட்ராஸ்!" என்று லட்சுமியிடம் சொல்லிச் சிரித்தேன்.

கூப்பே கதவைத் தாழிடப் போனவள் திரும்பவும் என்னிடம், "என்னங்க, அந்த ஷட்டரையும் கொஞ்சம் மூடிக் கொடுத்திடுங்களேன்?" என்று கெஞ்சும் தொனியில் கேட்டாள்.

'இதுதான் கடைசி உதவி... இனிமேல் எது கேட்டாலும் செய்யக்கூடாது!' என்ற நினைவோடு உள்ளே சென்று ஆனவரை முயற்சித்தேன். முடியவில்லை. தோல்வியை ஒப்புக் கொண்டு வெளியே வந்தேன்.

கூப்பே கதவு தாழிடப்பட்டது... 'இந் நேரம் புடவையை அவிழ்த்திருப்பாள்..! லட்சுமி இல்லாவிட்டால் அந்தப் பக்கம் பிளாட்பாரத்தில் இறங்கி நோட்டம் பார்க்கலாமே!'—என் குரங்குமனம் கிளை தாவ ஆரம்பித்தது.

"அம்மா, அம்மா...! பிஸ்கட் வேணும்மா!"—ரமேஷ்.

"கொஞ்சம் இரு. அந்தக் கதவைத் திறந்த உடனே எடுத்துத் தர்றேன்!"

ஆயிற்று ஐந்து நிமிடம். கதவு திறந்தது! அவள் வேறு புடவையில் இன்னும் பரிமளித்தாள்! மாராப்பைச் சரி செய்கையில் ஒரு கணமே தெரிந்து மறைந்த அவளின் முழு எட்டணு அளவு நாபிச் சுழி என்னைக் கிறக்கி நாராச நினைவுக்கு இழுத்துச் சென்றது. "ரொம்ப தாங்க்ஸ்!" என்றவள், என் மகன் ரமேஷின் கன்னங்களில் செல்லமாகத் தட்டி விட்டு இறங்கி, பிளாட்பார நெரிசலில் மறைந்தாள்!

'புகைவண்டிக்கு வந்த புது வசந்தம்!' என்று என் மனம் புதுக் கவிதை எழுதத் தொடங்கிய நேரம்...

பிஸ்கட் பாக்கெட் எடுக்க உள்ளே சென்ற லட்சுமி, "என்னங்க, சீக்கிரமா இங்க வாங்களேன்... இந்தக் கூடையில வச்சிருந்த என்னோட மணிபர்சைக் காணலீங்க!" என்று பதைபதைத்தாள்.

நானும் உள்ளே ஓடித் தேடிப் பார்த்தேன். கிடைக்கவில்லை! புடவை கட்ட வந்தவளின் நினைவு வர, உடனே வாசலுக்கு வந்து மக்கள் வெள்ளத்தில் அவளைப் பார்வையால் தேடினேன். அவளும் கிடைக்கவில்லை!

— புட்டுக்கோட்டை ராஜா

# காலில் விழுந்த மருமகள்



கல்யாண வீட்டில் தர்மசங்கடமான வேலை எனக்குத் தரப்பட்டிருந்தது. சந்தடி சாக்கில் சாப்பாட்டுக்கு வெளியாட்கள் புகுந்து விடாதபடி பார்த்துக் கொள்ளும் வேலை. கவனமாக இருந்தேன்.

அந்தக் குறிப்பிட்ட கிழவர் மீது எனக்குப் பலத்த சந்தேகம்.

விடக் கூடாது ஆசாமியை என்று நைஸாக அவர் இருந்த பக்கம் போனேன்.

ஆசாமி கலகலப்பாக ஒரு கும்பலில் அரட்டை அடித்துக் கொண்டிருந்தார். இப்படி வருகிறவர்களுக்கு அரட்டை ஒரு டெக்னிக். நானும் போய் உட்கார்ந்தேன், அவர் சாயத்தை வெளுப்பதென்று.

கிழவர் என்னைப் பார்த்ததும், ''வாங்கோ,'' என்று சுவாதீனமாகச் சிரித்துவிட்டு, தன் அரட்டைக் கச்சேரியைத் தொடர்ந்தார்.

''அப்படிப்பட்ட மருமகள், கடைசியில் மாமியார் காலில் ஒரு நாள் விழத்தான் விழுந்தாள். என்ன சொல்றீங்க?''

கிழவரின் அரட்டையைக் கேட்டுக் கொண்டிருந்த என் சித்தப்பா கேட்டார். ''அது எப்படி சார், மருமகள் அவ்வளவு சாமர்த்தியம்னீங்க. அவள் ஏன் மாமியார் காலில் விழுந்தாள்?''

எனக்கும் சுவாரசியம் தட்டியது. ''அவ்வளவு சாமர்த்தியம்னு?''

''முன்னாலே இப்படி வாங்கோ,'' கிழவர் என்னை முன்னுக்கு வரச் சொன்னார். ''அம்பிக்கும் சொல்றேன். அவன்தான் சொல்லட்டுமே. அந்த மருமகள் ஓரளவு படித்தவள். ஒரு வேலையும் பார்த்திட்டிருக்கிறாள். நல்ல உழைப்பாளி. உலக சமாசாரம் தெரிந்தவள். வாயைக் கொடுத்து மீள முடியாது. பாயிண்ட் பாயிண்டா எதிராளியைப் பிய்த்துடுவாள். துட்டு வசதியும் உண்டு. மாமியாரைச் சரிதான் போன்னு விரட்டியவள்தான். ஆனால் அதே மாமியார் காலில் போய் விழுந்தாள்.''

''ஏன்?''

''அதைத்தான் உன்கிட்டே கேட்கிறேன்,'' கிழவர் சிரித்தார்.

''மாமியாருக்கு லாட்டரியிலே பத்து லட்சம் விழுந்திருக்கும்.''

''ஊஹூம்.'' உதட்டைப் பிதுக்கினார் கிழவர். ''அவள் பாவம் நாலு வீட்டிலே இன்னைக்கும் பற்றுத் தேய்த்துக் கொண்டிருக்கிறாள்.''

சித்தப்பா கேட்டார். ''நான் சொல்றேன். மருமகளுக்குப் பிரசவ டயமா இருக்கும்.''

''மருமகளுக்கு வேணுமென்கிற ஆள்கட்டு உண்டு. வீட்டோடு பெரிய தாயார், அக்காக்கள் என்று வேணப் பேர் இருக்காங்க. ஆமாம், இலை போட்டாச்சோ?''

கும்பல் கிழவரைச் சாப்பிடக் கூட்டிச் சென்றது.

ஒரு வழியாகச் சாப்பிட்டு முடித்து வெற்றிலை போட்டுக் கொண்டார். புறப்படத் தயாரானார். ''தாம்பூலப் பை தர்றியா அம்பி. நான் புறப்படறேன்.''

''மருமகள் பற்றிச் சொல்லவில்லையே,'' சித்தப்பா கூடவே வழி அனுப்பப் போனார்.

கிழவர் சிரித்தபடி சொன்னார். ''மருமகள் தேர்தலிலே வேட்பாளராக நின்றாள். வீடு வீடாகப் போய் ஒவ்வொருத்தர் காலிலும் விழுந்து ஓட்டுக் கேட்டாள். மாமியாருக்கும் ஒரு ஓட்டு உண்டே. தொகுதியிலே பலத்த போட்டி. ஒரு ஓட்டுன்னாலும் ஒரு ஓட்டு. மருமகளுக்கு விட மனமில்லை. மாமியார் காலிலே விழுந்தாள்!''

கிழவர் புறப்பட்டார். 'சரியான ஓசி இராக்கி! ஏதாவது ரீல் விடறது!' பல்லைக் கடித்துக் கொண்டேன்.

வித்யா காயத்ரி




காலை எட்டு மணிக்குக் கறிகாய் வாங்கிக் கொண்டு உள்ளே நுழைந்ததுமே சுந்தரம் கத்தினன்.

''மாலதி! மாலதி! ஏய் சனியனே!''

சமையலறையில் போட்டதைப் போட்டபடி விட்டுவிட்டு ஓடி வந்து எதிரே நின்ருள் அவன் மனைவி. ஆனல், 'என்ன..... எதுக்குக் கூப்பிட்டீங்க!' என்று கேட்கவில்லை. கேட்டால், 'ஏன், துரைசானிக்கு இரண்டு நிமிடம் நிற்க முடியலையோ?' என்று எரிந்து விழுவான் என்று அவளுக்குத் தெரியும். கையில் ஏதாவது கிடைத்தால் அவள் மீது விட்டெறியவும் தயங்கமாட்டான்.

''உன் அண்ணன் குழந்தைக்குப் போன வாரம் பிறந்த நாள் வந்ததா இல்லையா? இங்கே வந்து கூப்பிட்டுவிட்டுப் போனுனமே? ஞாபகப்படுத்தித் தொலைப்பதற்கென்ன?'' என்று சீறினன் சுந்தர்.

''வந்து.... நினைவு இல்லை...''

''உன் மர மண்டைக்கு எதுதான் நினைவு இருக்கு! வழியில் பார்த்து, 'ஏன் வரல்லே?' என்று உன் அண்ணன் கேட்கிருன். சனியன், சனியன்! உன்னல் என் மானமே போகிறது!'' என்று கொஞ்ச நேரம் சத்தம் போட்டுவிட்டு, தானகவே ஓய்ந்தான்.

சாயந்தரம் மறுபடியும் ஓர் எரிச்சல்.

''ஏய் சனியனே! உன் புடவையை டிரை கிளீனிங் போட்டாயாமே? திருப்பி வாங்க வேண்டாமா? லாண்டரிக்காரன் என்னைக் கூப்பிட்டுக் கொடுக்கிருன்!'' என்ருன் சுந்தர்.

''மறந்து போச்சு....''

புடவையைச் சுருட்டி அவள் முகத்தில் அடித்தான்.

இரவு பத்து மணி.

தினசரி டைரி எழுதும் பழக்கம் உள்ளவன் சுந்தர். நாலு நாளாய் என்னென்னவோ வேலையில் விட்டுப் போயிற்று. இப்போது எழுத முயன்ருன். இன்றைய விஷயம் ஞாபகம் வந்தது. நேற்றைய விஷயமும் சுமாராய். அதற்கு முன்?

''ஏய்!'' பக்கத்தில் படுத்திருந்த மாலதியைக் கூப்பிட்டான். ''டைரி எழுதணும். முந்தா நாள் சமாசாரம் நினைவிருக்கிறதா?''

''ஓ.'' அவள் உற்சாகத்துடன் எழுந்து உட்கார்ந்தாள். ''காலையில் ஷேவ் செய்து கொண்டீங்க. பிளேடு விரலில் வெட்டிட்டுது. பாண்ட் எய்ட் போட்டுக் கிட்டீங்க. உங்க மானேஜர் எதிர் வீட்டு போனில் கூப்பிட்டார். பூனு போகணும்னு சொன்னர். சென்ட்ரலுக்கு ரிசர்வேஷனுக்காகப் போனீங்க.....''

அதன் பிறகு அவனுக்கே மளமள வென்று ஞாபகம் வந்துவிட்டது. எழுதிவிட்டு, ''அதற்கு முந்தின நாள்?'' என்ருன்.

''மெக்கானிக் ராஜுவை அழைச்சிட்டு வந்து ஸ்கூட்டரிலே ஏதோ ரிப்பேர் பார்த்தீங்க. அப்பாவுக்கு லெட்டர் போட்டீங்க. தாஜ்லே ஏதோ பார்ட்டிக்குப் போயிட்டு வந்து, வயிற்று வலின்னு ஓம வாட்டர் குடிச்சீங்க....''

அவள் சொல்லச் சொல்ல, அவன் ஆச்சரியத்துடன் அவளைப் பார்த்தானே தவிர, எழுதவில்லை. ''ஏய், நினைவில்லை, நினைவில்லை என்று எதுக் கெடுத்தாலும் சொல்லுவாயே? இதெல்லாம் எப்படி ஞாபகம் இருக்கு?''

''உங்க விஷயம்ன எனக்கு எதுவும் மறக்காது. என் விஷயம்னல்தான் மறக்கும்,'' என்று குழந்தை போலப் பதிலளித்த மாலதியை, வேறென்றும் செய்யத் தோன்ருமல், அணைத்துக் கொண்டான் அவன்.

பா. சுப்பி






பைக்குள் கையை விடுவதும் வெளியே எடுப்பதுமாக இருந்த அண்ணன் ரகுவைப் பார்த்தாள் இந்து. அவளைத் தவிர அவனை எவரும் பார்க்கவில்லை. அவன் இந்துவைப் பரிதாபமாகப் பார்த்தான்.

இந்துவின் குழந்தைக்கு முதலாம் ஆண்டு விழா. அவள் கணவன் ராமின் சகோதரர்களும் சகோதரிகளும் குழந்தையைச் சுற்றிக் குழுமியிருந்தனர். எல்லோருமே உயர்ந்த நிலையில் இருப்பவர்கள்.

ஒருவன் குழந்தைக்குப் பட்டுப் பாவாடை, பட்டுச் சட்டை எடுத்திருந்தான். இன்னொருவன் சன்னமாகச் சங்கிலி செய்திருந்தான். அடுத்தவன் ஆடும் குதிரை வாங்கி வந்திருந்தான். கடைசித் தம்பி மூன்று சக்கர சைக்கிள் வாங்கி வந்திருந்தான்.

சகோதரிகளும் சோடை போகவில்லை. ஒருத்தி பெரிய அட்டைப் பெட்டி நிறைய விளையாட்டுப் பொம்மைகளுடன் வர, மற்றவள் பிராக், கவுன், அது இது என்று இரு கைகளிலும் அள்ளிக் கொண்டு வர—

அவர்களுக்கெல்லாம் தன் மாமியார் விழுந்து விழுந்து உபசாரம் செய்வதையும் தன் அண்ணன் ரகு சீந்துவாரன்றி மூலையில் நிற்பதையும் பார்த்ததும் இந்துவுக்கு அழுகையே வந்துவிட்டது. அவளுடைய அழகையும் அடக்கத்தையும் பார்த்துப் பெண் எடுத்தவர்களுக்கு ஏன் அவர்கள் ஏழ்மை நிலையைப் பார்க்கவே பிடிக்கவில்லை?

அண்ணனைத் தானாவது போய்க் கவனிக்கலாம் என்று நினைத்த இந்து இரண்டடி எடுத்து வைத்திருக்க மாட்டாள். அவள் கணவன் ராம் அதட்டினான். ''இந்து, வா இங்கே!'' அவள் மனதுக்குள் அழுதபடி திரும்பினாள்.

திடீரென்று குழந்தை அழத் தொடங்கிற்று. என்ன சமாதானம் செய்தும் அதன் அழுகை நிற்கவே இல்லை. மாறாக அதிகரிக்கவே செய்தது. நிமிஷத்துக்கு நிமிஷம் அழுகையின் வேகம் ஏறிற்று.

''ஏதாவது பூச்சி கடிச்சிருக்குமோ?''

''வயத்தைக் கியத்தை வலிக்கிறதோ என்னவோ?''

''சட்டையை இவ்வளவு இறுக்கமாகவா போடறது?''

''திருஷ்டியா இருக்கும்!''

தலைக்குத் தலை பேசப் பேச, குழந்தையின் அழுகையும் அதிகமாயிற்று.

'குதிரை பார், ஆடறது!'

''குருவி பார், கத்தறது!''

''மோட்டார் பார், ஓடறது!''

ஊஹூம்! குழந்தையின் அழுகை எதற்கும் நிற்கவில்லை. அதிகமாகவே ஆனது. அதை எடுத்துப் பால் கொடுக்கலாமா என நினைத்தாள் இந்து. அப்போது காதுக்கு இனிமையான, கேட்டாலே குழந்தைகளை 'கிளுகிளு'க்க வைக்கிற, பிளாஸ்டிக்—ஒரே ஒரு ரூபாய் விலையுள்ள—கிலுகிலுப்பை சப்தம் கேட்டதும் சொல்லி வைத்தாற் போல் குழந்தை அழுகையை நிறுத்திவிட்டுச் சிரித்தது.

ரகு கையில் கிலுகிலுப்பையை ஆட்டியபடி குழந்தையின் அருகில் வந்தான். அது அவனிடம் தாவிற்று. கிலுகிலுப்பையை வாங்கி ஆட்டிச் சப்தம் உண்டாக்கிச் சிரித்து, ''மாமா,'' என்றது.

ராமுவும் சரி, மற்றவர்களும் சரி தாங்கள் அதிக விலையில் வாங்கி வந்த பொருட்கள் குழந்தையின் அழுகையை நிறுத்தாமல் ஏழை ரகு ஒரே ஒரு ரூபாய் விலையுள்ள கிலுகிலுப்பையைக் கொடுத்ததும் அழுகையை நிறுத்தியதுமல்லாமல் சந்தோஷமும் அடைந்ததைப் பார்த்துவிட்டு, ''ரகு, சாப்பிட வா!'' என்று அழைத்தார்கள்.

**சுகந்தி**




எங்கள் ஊர் வாத்தியார் பிள்ளையை மனநல மருத்துவமனையில் சேர்த்திருந்தது. ஆசிரியர் என் மதிப்புக்குரியவர். அவர் கேட்டுக் கொண்டதற்கிணங்கப் பையனைப் பார்க்க மாதத்தில் ஒருநாள் அங்கு போவேன்.

இன்றைக்கும் அதற்காகத்தான் வந்திருந்தேன். பையனைப் பற்றிய விவரத்தை வழக்கம்போல் பாரத்தில் எழுதிக் கொடுத்துவிட்டு அவன் வருகைக்காகக் காத்திருந்தேன். என்னைப் போல வரும் பார்வையாளர்களிடம் பேச்சுக் கொடுப்பது அங்கு எனக்கு உற்சாகமான பொழுது போக்கு. எத்தனை விதமான கதைகள்!

அருகிலிருந்தவர் யாரிடமோ கணேசன் என்பவனைப் பற்றிக் கன்னா பின்னாவென்று திட்டிக்கொண்டிருந்தார். ''ஏன் சார், கணேசனுக்கு எப்படிப் பைத்தியம் பிடித்தது?'' என்று அவர் வாயைக் கிண்டினேன்.

''நீ வேணா விசாரிச்சுப் பாரு தம்பி, பைத்தியம் பிடிக்கிறதுக்கு, ஜெயிலுக்குப் போறதுக்கு இதுக்கெல்லாம் பெரும்பாலும் பொம்பிளை விவகாரம்தான் காரணமா இருக்கும். ஒரு பொம்பளை சமாசாரத்திலேதான் இந்தப் பாவி கணேசனும் பைத்தியமாப் போனான். எத்தனை கெட்டிக்காரப் பய புள்ளை! இப்படி புத்திகெட்டுப் போயிட்டானே!'' என்று சப்புக் கொட்டினார்.

தொடர்ந்து அவர் சொன்ன விஸ்தாரமான கதையின் சுருக்கம் இவ்வளவுதான்:

கணேசன், தேவி என்ற பெண்ணை உயிருக்குயிராய்க் காதலித்தான். இரண்டு பேரும் கல்யாணம் செய்துகொள்ள முடிவு செய்தார்கள். ஒளிவு மறைவின்றிப் பெற்றோரிடம் கேட்டார்கள். பெற்றோரும் ஒப்பி, ஜாதகம் பார்த்துக் கல்யாண நாள் குறிக்க முன்வந்தார்கள். இந்தக் கட்டத்தில்தான் வந்தது வினை. இந்தப் பெண் தேவிக்குத் தோஷ ஜாதகமாம். அவள் யாரை மணந்து கொண்டாலும் உடனே விதவையாகி விடுவாளாம். இதைப் பார்த்ததுமே இருதரப்புப் பெற்றோர்களும் பயந்துபோய்க் கல்யாண யோசனையைக் கைவிட்டனர். 'நான் உங்களுக்கு யமனாய் இருக்க மாட்டேன்,' என்று தேவி அவனைப் பிரிந்து போய்விட்டாள். கணேசன் அவள் நினைவாகவே இருந்தான்.

தேவிக்கு வேறு இடத்தில் கல்யாணம் ஆயிற்று. பிளட் கான்ஸர் வந்தது. போய்விட்டாள்.

''அவள் யாரைக் கல்யாணம் பண்ணிக் கொள்வாளோ அவன் இறந்து விடுவான் என்றுதானே சோதிடம் சொல்லிற்று? இப்போ என்ன ஆச்சு? அவன் கல்குண்டு போல் இருக்கிறான். தேவி செத்துப் போய்விட்டாளே!''

கணேசன் சொல்லிச் சொல்லிப் பொருமிக் கொண்டிருந்தானாம். அதற்காக அவனை மனநல மருத்துவமனையில் கொண்டுவந்து சேர்த்தார்களாம்.

''அவன் பொருமியது நியாயம் தானே சார்? அதற்காகவா பைத்தியம் என்று அடைப்பார்கள்?'' என்றேன் நான்.

''கல்யாணமான கையோடு அவள் செத்திருந்தால் கணேசன் பொருமியதில் நியாயம் உண்டு. அவள் கல்யாணமாகி, பிள்ளை குட்டி பெற்று, பேரன் பேத்தி எடுத்தப்புறம் செத்துப் போனாள். அதற்காக இவன் பொருமினால் என்ன சொல்வது?''

''சார், நீங்க அவன் இவன்னு பேசினதும் ஏதோ சின்ன வயசாக்கும்னு நினைச்சேன்,'' என்றேன் அசடு வழிய.

''கணேசன் என்னைவிட எட்டு மாசம் சின்னவனாச்சே!'' என்றார் அந்தப் பெரியவர்.

எஸ். ராஷ்மி

# மழைக்கு ஒதுங்கிய பசு

மாடிப்படி ஏறும்போது கவனித்தேன். படிக்கட்டு அருகே துணிச் சுருளில் ஒரு மாசம்கூட ஆகாத பச்சைக் குழந்தை வாயில் விரலைப் போட்டவாறு உடம்பை முறுக்கி முறுக்கி அழலாமா வேண்டாமா என்று நேரம் பார்த்துக் கொண்டிருக்க அதன் தாய் —கனகராஜு வீட்டு வேலைக்காரி—துணி உலர்த்திக் கொண்டிருந்தாள்.

மாடியில் குடியிருந்த ராஜு என் நண்பர். கொஞ்சம் விசித்திரமான இலாகாவில் அவர் அதிகாரி. கசாப்புக்குச் செல்லும் அடி மாடுகள் ஆரோக்கியமாக இருக்கின்றனவா என்று பரிசீலிக்கும் உத்தியோகம். நண்பரிடம் என் சொந்த விஷயமாகப் பேசிவிட்டுப் பேச்சோடு பேச்சாக, ''உங்க வீட்டு வேலைக்காரிகிட்டே சொல்லி வையப்பா கொஞ்சம். பச்சைக் குழந்தையை மாடிப்படி அருகே போட்டுவிட்டு அவள் பாட்டுக்கு வேலை செய்கிறாள். காக்காயோ, நாயோ கடித்துவிட்டால் அப்புறம் வம்பு,'' என்றேன். ''ரொம்பப் பாவமாயிருக்கிறது.''

அவர் கோபத்துடன், ''பாவமே படக் கூடாது சில பேருக்கு,'' என்றார். ''இவள் புருஷன் சன்னாசி சரியான கொழுப்புப் பிடித்தவன். என் இலாகாவில்தான் வேலை. அடிமாடு ஒண்ணை ஆபீசுக்குத் தெரியாமல் விற்றுச் சாராயம் குடிச்சிட்டான். சீட்டுக் கிழிச்சிட்டேன். சோற்றுக்கு லாட்டரி. பச்சைப் பிள்ளைக்காரி வழியில்லாமல் வந்து வேலை செய்கிறாள்—காப்பியாவது கிடைக்குமே.''

கொஞ்ச நேரம் நான் மௌனமாக இருந்தேன். பிறகு, சொன்னேன். ''கனகராஜ், இவள் புருஷன் சன்னாசியை எனக்குத் தெரியும். அவன் ரொம்ப நல்லவன். அந்த அடிமாட்டை விற்கவில்லை. அதை அவன் என்ன செய்தான் என்று உனக்குத் தெரிந்தால் அவனை நீ மன்னித்திருப்பாய்.''

நான் விவரித்தேன்: ''சன்னாசிக்கு நீண்ட நாள் கழித்து இந்தக் குழந்தை பிறந்தது. பிறந்ததிலிருந்து அதற்கு உடம்பு சரியில்லை. ஒரே பேதி. தாய்ப் பால் ஒப்புக் கொள்ளவில்லை. பசும் பால் கொடுத்துப் பார்த்தார்கள். எந்தப்



பசுவின் பாலும் ஒப்புக்கொள்ளவில்லை. பேதி நிற்கவே இல்லை. ஒருநாள் நல்ல மழை. ஒரு பசுமாடு அவர்கள் குடிசை ஓரமாக வந்து நின்றது. அந்தச் சமயம் குழந்தை பசியினால் கதறிக்கொண்டிருந்தது.

''பசு மாடு அந்தச் சத்தம் கேட்டு குடிசைக்குள் வந்தது. 'மா!' என்று பெரியதாக செருமியது. அடுத்த நிமிஷம் அதன் மடியிலிருந்து பால் சொரிய ஆரம்பித்தது. சன்னாசிக்கு இது நிச்சயம் தெய்வச் செயல்தான் என்று தோன்றியது. அந்தப் பசுவின் பாலைப் பிடித்துக் குழந்தைக்குப் புகட்டினான். ஒரு மாதமாக நிற்காத பேதி அப்போதிலிருந்து நின்றுவிட்டது. அவனுக்கு உதவிய அந்தப் பசுதான் கொஞ்ச நாளில் அடி மாடாக உங்கள் இலாகா கொட்டடிக்கு வந்திருக்கிறது. தனக்கு உதவிய தெய்வப் பசுவை அவனுக்கு அடையாளம் தெரிந்துவிட்டது. அது சாவதற்கு அவனுக்கு விருப்பமிருக்குமா? விற்றுவிட்டதாகக் குற்றத்தைத் தானாகவே சுமத்திக் கொண்டு அதை விடுவித்துவிட்டான். இதுதான் நடந்தது.''

கனகராஜுக்கு மனசு கனிந்து போயிற்று. ''இதையெல்லாம் அவன் என்கிட்டே சொல்லியிருக்கலாமே?'' என்று வருந்தியவர் மீண்டும் உத்தியோகம் போட்டுத் தந்தார்.

என் மனசுக்கு நிம்மதி. 'ஆயிரம் பொய் சொல்லி ஒரு கல்யாணம் செய்துவை,' என்பார்கள். நான் ஒரே ஒரு பொய் சொல்லி ஒரு பச்சைக் குழந்தைக்காரியின் கணவனுக்கு இழந்த வேலையை வாங்கிக் கொடுத்துவிட்டேன்!

எனக்கு சன்னாசியையும் தெரியாது. தெய்வப் பசுவையும் தெரியாது!

**எஸ். விஜயலட்சுமி**




கோர்ட்டில் ஏகப் பர்பரப்பு. ஒரு விசித்திரமான வழக்கு விசாரணைக்கு வந்திருந்தது.

''ஒன்றுமில்லை. மாம்பலத்துக்கு எந்த பஸ் என்று முன்பின் தெரியாத ஒருத்தன் இவனைக் கேட்டானும். இருபத்தொண்ணும் நம்பர் என்று இவன் சொன்னும். அதை நம்பி அந்த பஸ்ஸில் ஏறினப்போ கண்டக்டர் பதினெண்ணும் நம்பர் பஸ்லே போய்யா. எந்த மடையன் சொன்னன் இருபத்தொண்ணுன்னு கேட்டானும். கீழே நின்னுட்டிருந்த இவனைக் காட்டி, 'இதோ இந்த மடையந்தான்,'னு அவன் சொன்னும். அவ்வளவுதான், இவன் என்னமோ ஆத்திரத்திலே நானுடா மடையன்னு கையிலே என்னமோ இரும்பு ஸ்பானரோ ஏதோ வச்சிருந்திருக்கான். அதிலேயே ஒரு போடு போட்டுக் கொலையே பண்ணிட்டான். அவனுக்குத் வக்காலத்து வாங்கிப் பேச வக்கில் வேற.'' பார்வையாளர்களில் ஒருத்தர் விவரம் சொன்னர்.

குற்றம் சாட்டப்பட்ட சபாபதிக் காக வக்கில் வாதாடினர்.

''நீதிபதியவர்களே! என் கட்சிக் காரரின் முன் சரித்திரம் தெரிந்தால் அவர் கொலைகாரர் ஆனதில் நியாயம் இருப்பதை ஏற்றுக் கொள்வீர்கள்.

''மிலாட்! என் கட்சிக்காரர் சபாபதி திரண்ட சொத்துக்கு அதிபதியாய், உயிருக்குயிராய் நேசித்த மனைவியோடு வாழ்ந்தவர். மனைவியின் மேலுள்ள பிரியத்தில் தன் சொத்தை அவள் பேருக்கு எழுதி வைத்தார். ஒரு குழந்தையைப் பெற்றுக் கொடுத்த பின் அந்தப் பெண் மனம் மாறிப் போனள். தவறு. அவள் மனம் மாறும்படி அவளை மயக்கித் தன் கைக்குள் போட்டுக் கொண்டான் சபாபதியின் சிநேகிதன் ஒருத்தன். அவள் கணவனைப் பிரிந்து அவனுடைய சொத்துக்களோடு ஓடிவிட்டாள். குழந்தையை வளர்க்கும் பொறுப்பு சபாபதி தலையில் விழுந்தது.

''குழந்தையைக் காப்பாற்ற, தன்னைக் காப்பாற்றிக் கொள்ள எத்தனை பாடு பட்டு எங்கெங்கெல்லாம் அலைந்தார். அரும்பாடு பட்டு ஒரு தனியார் நிறுவனத்தில் கிளார்க்காகச் சேர்ந்தார். அங்காவது அவரை வாழவிட்டார்களா? ஹெட் கிளார்க் ஒருத்தர் அவர் வேலையைத் தன் மச்சினனுக்கு வாங்கித் தரத் திட்டம் போட்டார். அவர் வசம் ஒப்படைத்த பைலை எடுத்து அழித்துவிட்டு அவர் மேல் அனுவசியப் புகார் செய்து வேலையை விட்டுப் போகச் செய்துவிட்டார். படித்தவர், கௌரவமாக வாழ்ந்தவர் பசி, பட்டினி, குழந்தையை வளர்க்க வேண்டிய பொறுப்பு இத்தனை சோதனைகளுக்கு ஆளானர்.

''கொலை செய்யப்பட்டவர் நமக்கு முன்பின் தெரியாத நபராய் இருக்கலாம். ஆனல் சபாபதிக்கு? தன் குடும்பத்தைச் சீரழித்து, தன் மனைவியையும் சொத்தையும் அபகரித்து, தன் குழந்தையுடன் தன்னை நடுத் தெருவில் நிற்க வைத்த அந்தச் சிநேகிதனைத் தோன்றினர். தட்டித் தடுமாறிக் கரையேறிய தன்னை மீண்டும் படு குழியில் தள்ளிவிட்ட ஹெட்கிளார்க்காய்த் தோன்றினர். கனம் நீதிபதியவர்கள் மனிதாபிமானத்தோடு என் கட்சிக்காரருக்கு வாழ்வளிக்கக் கோருகிறேன்.''

நீதிபதி தீர்ப்பு வாசித்தார். ''வாதியின் வக்கீல் வாதத்திலிருந்து வாதியின் இலக்கு இந்தக் குறிப்பிட்ட வழிப்போக்கர் அல்ல என்பதையும் அடக்கி வைக்கிற நியாயமான ஆத்திரங்கள் அல்ப காரணத்தால் வெடிக்கும் என்பதையும் புரிந்து கொள்ள முடிகிறது. அதற்காக என் அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன். ஆனல் கொலைக்கான நியாயத்தைச் சட்டம் அனுமதிப்பதில்லை. எனவே சபாபதிக்கு ஆயுள் தண்டனை விதித்துத் தீர்ப்பளிக்கிறேன்.....''

# புடவை கட்டின கணவன்



“இந்த ஸெண்ட் பாட்டில் உனக்கு. இந்தப் பாண்ட் துணி உன் அண்ணன் வந்தால் கொடு. உன் அப்பாவுக்காக இந்த ஷேவிங் செட்.....” என்று பெட்டியிலிருந்து ஒவ்வொன்ருக எடுத்துச் சம்பகாவிடம் கொடுத்துக் கொண்டிருந்தான் எதிராஜ். அலுவலகத்தில் பயிற்சிக்காக அவனை ஒரு வாரம் டோக்கியோவுக்கு அனுப்பியிருந்தார்கள். இன்றுதான் திரும்பியிருந்தான்.

அவன் மார்பில் சாய்ந்து கொண்டாள் சம்பா.

“ஏய்! முன்னைக்கு இப்போது கனமாகியிருக்கிருய், கழுதை! முன்னெலாம் நீ சாய்ந்தால் ரோஜா மாலை போட்டுக் கொண்ட மாதிரி இருக்கும்!”

“உக்கும்! எத்தனை வருஷம் வெளிநாடு போயிருந்தாலும் இந்த நாடக வசனங்கள் மட்டும் போகாது!” என்று அவள் அவனுடைய தலைமுடியை இரண்டு கைகளாலும் உலுக்கிஞள். பிறகு சட்டென்று நினைவு வந்தவளாக, “ஆமாம், இங்கே இருந்தபோது அமெச்சூர் டிராமா, ஆபீஸ் நாடகம் என்று சினேகிதர்களுடன் கூத்தடிப்பீர்களே, அங்கே போய் என்ன செய்தீர்கள்?”

“பிறவிக் கலைஞன் சும்மா இருக்க முடியுமா?” என்று மார் தட்டிக் கொண்டான் எதிராஜ். “அங்கேயும் ஏகப்பட்ட தமிழ் நண்பர்கள். என்னைப் போல் வந்திருந்தவர்கள் டோக்கியோவிலேயே செட்டிலானவர்கள்—இப்படிப் பல பேரைப் பிடித்து ஒரு நாடக மன்றம் அமைத்தோம்! ஐந்து டிராமா நடத்திஞேம். ஐயாவுக்கு என்ன வேஷம் என்று நினைக்கிருய்?”

பெட்டிக்குள்ளிருந்து நாலைந்து புகைப்படங்களை எடுத்துக் காட்டினுன் அவன். “எல்லா நாடகத்திலும் பெண் வேடம்! எடுத்துப் பார்!”

தத்ரூபமாய்ப் பெண் போலவே இருந்தான். [illegible] போனுள் அவள்.

[illegible] குளிக்கச் சென்றதும் [illegible] புகைப்படங்களை [illegible] பார்த்தாள். [illegible] வேதனை மண்டியது. [illegible]

[illegible]

அதுவும் எவளோ ஓர் இளவயதுப் பெண் கட்டிக் கொண்ட தினுசு தினுசான புடவைகள்.... அவைகளைப் போய் இவர் கட்டிக் கொண்டிருக்கிருர்.... அவளைத் தழுவிய புடவைகள் இவரைத் தழுவி..... சே!

சாயந்தரம் எதிராஜ், “சம்பா, உனக்குத் தெரிந்த ஏழைப் பெண்கள் யாராவது இருக்கிருர்களா? இரண்டு மூன்று பேர் சொல்லு,” என்றுன்.

அவள் திகைத்தாள். “எதற்கு?”

காலையிலிருந்து திறக்காமலே வைத்திருந்த சூட்கேஸை அவன் திறந்தான். “இதற்குத்தான்.”

உள்ளே வகை வகையாய்ப் புடவைகள்! பத்துப் பன்னிரண்டு!

“என்ன.... ஏது இதெல்லாம்.....”

“டோக்கியோவில் ராமகிருஷ்ணன் என்று ஒரு சினேகிதர். அவருடைய பெண் அங்கேயே ஒரு தமிழரைக் கல்யாணம் செய்து கொண்டு சந்தோஷமாக இருந்தாள். இரண்டு வருடத்துக்கு முன்பு அவள் கணவன் திடீரென்று ஒரு கார் விபத்தில் இறந்துவிட்டான். அந்தப் பெண் அன்று முதல் இந்தப் புடவைகளைக் கட்டுவதில்லை..... வெளிநாட்டில் இருந்தும்கூட வெறும் வெள்ளைப் புடவைகளைத்தான் கட்டுகிருள். அவளுடைய புடவைகளைத்தான் எங்கள் டிராமாக்களுக்குக் கொடுத்திருந்தாள்...... இப்போது என்னிடம் எல்லாவற்றையும் தூக்கிக் கொடுத்து, யாராவது ஏழைப் பெண்களுக்குக் கொடுத்துவிடுங்கள் என்றுள்.... ஏய்! ஏ சம்பா, நான் இப்ப என்ன சொன்னேன்? ஏன் திடீரென்று அழுகிருய்?”

ஆர். எஸ்.




எப்படியும் ஜமுனாவைக் கண்டுபிடித்து விடலாம் என்ற நம்பிக்கையுடன் தான் காஞ்சிபுரம் பஸ்ஸில் ஏறினான் ராகவன்.

எதிர்வீட்டு ஜமுனாவை அவன் உயிருக்குயிராய்க் காதலித்தான். அவள் பாரிமுனையில் ஒரு தனியார் நிறுவனத்தில் டைப்பிஸ்டாய் இருந்தாள்.

ராகவன் ஒரு வார முகாம் திருச்சி சென்றுவிட்டுத் திரும்பி வந்தபோது அவனுக்குப் பேரதிர்ச்சி. எதிர் வீடு பூட்டியிருந்தது. விசாரித்ததில் ஜமுனாவின் மாமாகாரர் யாரோ வந்திருந்ததாயும் அவர் அந்தக் குடும்பத்தையே தம்முடன் அழைத்துக்கொண்டு போய்விட்டார் என்றும் சொன்னார்கள். எங்கே, ஏன் என்ற விவரம் ஏதும் தெரியவில்லை.

ஜமுனாவை என்றைக்காவது சந்திப்போம், தனக்காக அவள் காத்திருப்பாள், என்ற நினைப்பில் அவன் வேறு பெண்களைத் தட்டிக் கழித்துவிட்டான்.

விளையாட்டுப் போல் ஒரு வருடமாகிவிட்டது. ராகவனின் நம்பிக்கை வீண் போகவில்லை. நேற்றுதான் காஞ்சிபுரத்திலிருந்து வந்திருந்த நண்பன் ஒருவன் அவனுடைய காதலி ஜமுனாவைக் காஞ்சி ஏகாம்பர நாதர் கோவிலில் பார்த்ததாயும், கூட உறவுகாரர்கள் போல் பெண்கள் இருந்ததால் பேச முடியவில்லை என்றும் சொன்னான்.

எப்படியும் அதே இடத்துக்கு ஜமுனா தினமும் வரக்கூடும், பார்க்கலாம் என்ற நம்பிக்கையுடன் தான் புறப்பட்டான்.

பஸ் வாலாஜாபாத்தில் நின்றது.

காதலியின் நினைவில் அமிழ்ந்து போயிருந்த ராகவனை... ''தம்பி, நீயா?'' என்ற குரல் திடுக்கிட வைத்தது.

அவனுடைய ஒன்றுவிட்ட அக்காள் கமலம். காஞ்சிபுரம்தான் அவள் சொந்த ஊர் என்பது அப்போதுதான் நினைவு வந்தது.

''இதா தெரியுதில்லையா?'' தன் மகளை அறிமுகம் செய்து வைத்தாள். ''இங்கேதான் ஹாஸ்டலில் தங்கிப் படிக்கிறாள். லீவ் இல்லையா? கூட்டிப் போக வந்தேன்...''

**எஸ். சகுந்தலா**

அந்தப் பெண் நல்ல வளமையாய் இருந்தது. நாணிக் கோணிக்கொண்டு அடிக்கண்ணால் அவனை விழுங்கியது. ராகவன் சங்கடத்தில் நெளிந்தான்.

சொந்த வேலை விஷயமாய் வந்திருப்பதாய் அவன் ஒதுங்க முயன்றான்.

அவர்கள் விடவில்லை.

நேற்று இரவு தூக்கமில்லாததோடு பஸ்ஸில் வரும்போது ஏதோ தூசு கண்ணில் விழுந்துவிட்டதால் தேய்த்துத் தேய்த்து ராகவனின் கண்கள் சிவந்து போயிருந்தன.

அதைக் கவனித்த கமலம், ''கொஞ்சம் தாய்ப் பால் விட்டால் சரியாய்ப் போகும். இரு வருகிறேன்,'' என்று எழுந்து பின்கட்டுக்கு எங்கோ போய் வந்தாள்.

சற்றுப் பொறுத்துப் பின்கட்டிலிருந்து ஒரு பெண் பாலாடையில் தாய்ப் பால் கொண்டு வந்தது.

நிமிர்ந்து பார்த்தவன், அப்படியே பார்த்துக் கொண்டிருந்தான். பிறகு அவசரம் அவசரமாய்த் தன் பையை எடுத்துக்கொண்டு புறப்பட்டான்.

அக்காள் கமலம் திகைப்புடன், ''ராகவா, என்ன ஆச்சு?'' என்றாள்.

''வந்த வேலை முடிஞ்சு போச்சுக்கா!''

தாய்ப்பால் கொண்டுவந்த ஜமுனா— ராகவனின் முன்னாள் காதலி— கண் கலங்க அவனைப் பார்த்துக் கொண்டிருந்தாள். அவளுக்குக் கல்யாணமாகி, குழந்தையும் பிறந்துவிட்டதா!

கடவுளே!

கமலம் வழிமறித்து, ''ராகவா, எப்படா கல்யாணம் பண்ணிக்கப் போறே?'' என்று கேட்டாள்.

''நாளைக்கேன்னாலும் எனக்குச் சம்மதம்,'' என்றான் அவன்.

# கணவனுக்காக

"இப்படி பக்கத்திலே உட்காருங்களேன்..." கணவனின் கரத்தை தனது மெலிந்துபோன கைகளால் பற்றி எதையோ பேச அருகில் அழைத்தாள், அந்த டைபாய்டு ஜுர நோயாளி விஜி.

"என் விஜி? ஏதாவது வேணுமா?" கவலையுடன் கேட்டான் அவன்.

"எனக்கு ஒன்றும் வேணாம்...! உங்களைப் பார்க்கத்தான் எனக்குப் பாவமாக இருக்கிறது..."

"என்னைப் பத்தி எதுவுமே கவலைப் படாதே விஜி.! எனக்கு என்ன வேளைக்குச் சாப்பாடு, காப்பி எல்லாம் தான் உன் எதிர்வீட்டு தங்கை மூலம் கிடைக்கிறதே!"

"இருந்தாலும்...பத்து நாளாக நீங்கள் மாடி அறைப் பக்கமே போக வில்லை ... உங்க ஏக்கம் ... என்னை என்னவோ செய்றதுங்க..."

"பைத்தியம் போல பேசாதே! இன்னும் கொஞ்ச நாளில் நீ நன்றாக குணமாகி விடுவே...நானும் பழைய படி..."

"இல்லை ... எனக்கென்னவோ பழைய தெம்பு வர ரொம்ப நாளாகும்னு தோணுது...நீங்க கூப்பிட்ட குரலுக்கு எல்லாம் ஓடி வரக்கூடியவளாக என்னால் ஆக முடியுமான்னுகூட பயமாக இருக்கு...அதனாலே..."

"அதனாலே...?" அவன் புருவத்தை வளைத்து கேள்விக் குறியாக்கினான்.



"ஒரு ஏற்பாடு செய்யலாம்னு இருக்கேன்...நம்ம வீட்டிலே வேலை பார்க்கும் புவனாவை நீங்க அப்பப்போ நின்னுகிட்டு கவனிக்கிறதை நான் ஜாடையா பார்த்திருக்கேன் ... நல்ல உடம்பும். அழகும் இருக்கு...கருப்பாக இருந்தாலும் நன்றாகத்தான் இருக்கிறாள் இல்லையா...? பணத்திற்காக எப்பவும் வருவாள்...!"

"சீ...பைத்தியம்போல கற்பனை பண்ணாதே!"

"இல்லை...நான் ஏற்கனவே அவளைப் பேசி சரிகட்டி வைத்திருக்கேன்...நீங்க சரின்னு சொன்னால் போதும்...எப்ப வேணுமானாலும் வருவாள்...!"

"உனக்கு வரவர மூளையே மழுங்கிப் போயிட்டுது விஜி...! உன்னை தினமும் பார்த்த இடத்திலே அவளையா.. சே...சே...வேண்டாம்..." பாதி குழப்பமும், எரிச்சலுமாக எழுந்திருக்க முனைந்த அவனை பிடிவாதமாகப் பற்றி மறுபடியும் உட்கார வைத்தாள் அவள்.

"பின்னே என்ன செய்கிறதாக உத்தேசம்? நான் எழுந்து பழையபடி நடமாட கொஞ்சம் மாசங்கள் கூட ஆகலாம் போலிருக்கே ... அதுவரை நீங்க இப்படி இருந்தா...?" அவளை பரிதாபமாகப் பார்த்து தலை குனிந்தான் அவன்.

"சரின்னு சொல்லுங்க...! அப்போதுதான் ரெண்டு பேருமே நிம்மதியா இருக்க முடியும்...!"

"சரி...வேறு என்ன செய்கிறது...? நான் மாடிக்குப் போய் ஏற்பாடு எல்லாம் செய்கிறேன் ... புவனாவை அனுப்பு..."

"அப்பாடி....! உங்க டெபிபார்ட்டிங் பரீட்சைக்கு இந்த சமயத்திலே மாடிலாக நின்னு ஒத்தாசை பண்ண முடியாமல் படுத்துண்டேனே என்று கவலையா இருந்தது... புவனா வந்துட்டான்னு கவலையில்லை...! எந்தெந்த போஸ்லே நிக்கணும்னு சரியா சொல்லி அவளைப் பார்த்து போடுங்க. இந்த தடவை கட்டாயம் பாஸ் பண்ணிட்டா உங்களுக்கு வேலை நிரந்தரம் ஆயிடும் இல்லையா...?"

தன் ஏற்பாட்டிற்கு கணவன் ஒத்துக்கொண்ட பெருமிதத்துடன் புவனாவைக் கூப்பிட மெதுவாக எழுந்தாள் அவள்.

—ரமணிரங்கநாதன்



# வேதா கோபாலன்

நிரம்பி வழிந்து கொண்டிருந்தது அந்தப் பஸ்.

மவுண்ட் ரோடில்தான் அந்த அப்பாவி ஏறினர். பரதனை நினைவு படுத்தினர். பாவம், செருப்பு அறுந்து போய்விட்டது போலும். இனிமேல் போட முடியாது என்ற நிலைமைக்கு வந்திருந்தது. தைக்க நேரமில்லாமல் பஸ் வந்து விட்டிருக்க வேண்டும். அவசரமாய் வலக் கையில் ஒரு பெருங்காய விளம்பரத் துணிப் பையையும் இடக் கையில் செருப்பு ஜோடியுமாய் அத்தனை கூட்டத்தில் இடித்துப் பிடித்துக் கொண்டு ஏறி விட்டார்.

''ச்சே..... என்னய்யா கொஞ்சம்கூட மேனர்ஸ் இல்லாமே..... அசிங்கம் பிடிச்ச மனுஷன்....''—இப்படி ஒரு கண்டனம்.

''பெரீவரே.... அந்தச் செருப்பை எடுத்துத் தலையில் வெச்சுக்கய்யா. கொஞ்சம் இடம் மிச்சமாகும்.''—இப்படி ஒரு கிண்டல்.

ஆளுக்கு ஆள் அந்த மனிதரின் தலையைப் போட்டு உருட்டினர்கள். கொஞ்சம் மிரட்சியுடன் அவர் அவைகளை ஏற்க வேண்டியிருந்தது.

''அப்பா.... என்னபபா இது? நாலு பேருக்குத் தொந்தரவாய் இப்படியா எடுத்திட்டு வர்றது? குடுங்க.... நான் எடுத்துக்கறேன் செருப்பை.....'' கிளிகுயில் எல்லாமாய்ச் சேர்ந்து அந்த அழகிய இளம் பெண்ணின் தொண்டைக்குள் சிறைப்பட்டிருக்க வேண்டும். பளபளப்பான கல்லூரி மாணவி. அமர்க்களமாய்ச் செங்கல் நிற ஷிபான் புடவை கட்டிக் கொண்டிருந்தாள். அதற்கு மாட்சாய்க் கழுத்திலும் காதிலும் கிரிஸ்டல்கள் மின்னின. ஷாம்பூ போட்ட கூந்தல், இரும்புக் கம்பிகள் இளைந்தாற் போல் மெத்தென்று தோளுக்கும் கீழே இறங்கின.

''வே.... வேணும்னா... புடவை ... டும். நானே எடுத்துக் ...

கூட்ட இடிபாடுகளுக்கிடையே அவர் திணறித் திணறிச் சொன்னர்.

''சரிதான். கொடுங்க டாடி. நம்ம ஊர் மாதிரி இல்லே மெட்ராஸ்,'' என்றவாறு கலகலவென்று சிரித்தாள். விருட்டென்று அவரின் கைகளிலிருந்து செருப்பைப் பிடுங்காத குறையாய் வாங்கிக் கொண்டாள்.

இத்தனை நேரம், கிழவர் கையில் அந்தச் செருப்பு இருந்த போது கண்டனமும் கேலியுமாய்ப் பேசிய அதே கும்பல், இப்போது இளம் பெண்ணின் கையில்—அதுவும் கல்லூரி மாணவியின் கையில் அதே சேறு படிந்த செருப்பு இருக்கும் போது எத்தனை பவ்யமும் பணிவுமாய் அட்ஜெஸ்ட் செய்து கொள்கிருர்கள்! கொஞ்சம் புன்னகையுடன் அவள் கேட்டுக் கொண்டால் அவர்களில் ஒருவரே கூட அதை வாங்கிவைத்துக் கொள்வாரோ என்னவோ!

சைதாப்பேட்டையில் பஸ் நின்ற போது, அந்தப் பெரியவரைத் தொடர்ந்து அந்தப் பெண்ணும் இறங்கினாள்.

''இந்தாங்க பெரியவரே. இந்த ஜனங்களோட புத்தி எனக்குத் தெரியும்! ஆளுக்குத் தகுந்த மாதிரி பேச்சும் மாறும். அதுதான் உங்களை அப்பான்னு கூப்பிட்டேன்! நல்ல வேளையாய் நீங்க எதுவும் மறுத்து விஷயத்தைக் குட்டிச்சுவராய் ஆக்காமல் ஒத்துழைச்சீங்க,'' என்ருள் அந்தப் பெண், செருப்பை அவரிடம் கொடுத்து.

நன்றியுடன் மலர்ந்தது அவரது ...




காலையில் அலுவலகத்திற்குள் நுழைந்த உடனேயே சங்கரைத் தனியே அழைத்து, அந்த வெடி குண்டைத் தூக்கிப் போட்டாள் பங்கஜம். ''சங்கர், இனிமே—அதாவது இன்னியிலேர்ந்து நாம ரெண்டு பேரும் பஸ்ஸுல சேர்ந்து போறது அவ்வளவு நல்லா இருக்காதுன்னு நெனைக்கிறேன்.''

சங்கர் திடுக்கிட்டாலும் வெளிக் காட்டிக் கொள்ளாமல், ''அட்ரு சக்கை! என்னம்மா, எப்பலேர்ந்து இந்த ஞானோதயம்? எவனாவது என்னவாவது சொன்னுை? யாரு அவன்? சொல்லு.... சீவிடறேன் சீவி!'' என்ருன்.

''நானுத்தான் இந்த முடிவுக்கு வந்தேன்.''

''ஓகோ, அப்படியா? அப்பக் காரணத்தைச் சொல்லேன் கேட்போம்.''

''உங்களுக்குக் காரணமா தேவை? நான் சொன்னு அதுல டேஸ்ட் இருக்காது. நீங்களா புரிஞ்சுக்குங்க. பஸ் வரட்டும், புரியும்!''

தினமும் மாலையில் அந்தக் குறிப்பிட்ட பஸ்ஸில்தான் அவன் போயாக வேண்டும். அடுத்த பஸ் வர அரை மணி நேரம் தாமதம் ஆகும். அவனுக்கு வேறு பஸ் இருந்தாலும் அவளுடன் அந்தக் குறிப்பிட்ட ரூட் பஸ்ஸில்தான் வருவான்.

**ஜோமோ**

அவளருகில் அமர்ந்து, உராய்ந்து பிரயாணம் செய்கிற அந்தக் கால் மணி நேரத்தை அவன் இழக்க முடியுமா? பாதி வழியில் இறங்கி வேறு பஸ்ஸில் போகும்போது கூடத் தன்னருகில் அவள் அமர்ந்திருப்பதாகவே எண்ணுவான்.

இப்போது அவளுடைய திடீர் முடிவு அவனுக்கு அதிர்ச்சியைத் தந்தது.

மாலை அலுவல் அஸ்தமித்தது.

அவளுடன் பஸ் ஸ்டாப் வரை வந்தவன் அதுவரை மனதுக்குள் குமுறி விட்டு, ''இத பாரு.... என்னைப் பொறுமை இழக்க வைக்காதே! விவரமாகச் சொல்லு,'' என்று சின்னதாகக் கோபித்தான்.

''பஸ் வரட்டும், புரியும்.''

''அப்ப நான் உன்னோட வரல்லே! வேற பஸ்லே போயிடறேன்,'' என்று திரும்பி நின்ருன்.

இன்னமும் சோதனை செய்வதில் அர்த்தம் இல்லை என்கிற முடிவுடன் பங்கஜம், ''நேத்துதான் என் அப்பா சொன்னுர்.... வந்து.... இன்னையிலேர்ந்து....'' என்று அவள் ஆரம்பித்து முடிக்கும் முன் பஸ் வந்து விட்டது. அவள் பஸ்ஸில் இடத்திற்கு முந்தி ஓடினுள்.

அவனும் பின்தொடர்ந்து ஏறினுன். 'என்ன சொன்னுர் பங்கஜத்தின் அப்பா?' குழம்பினுன்.

அவள் தனியே அமர, அவன் அவளருகில் இடம் பிடிக்க எத்தனிக்க, அடுத்த கணம் அவன் யாரையோ பார்த்து விட்டு மெல்லப் பின்வாங்கி நகர்ந்து பின் சீட்டில் வியர்த்து அமர்ந்து தனக்குள் பெருமூச்சுவிட்டான். பங்கஜத்தின் அப்பா அந்த ரூட்டில் அன்று முதல் கண்டக்டர்!

''டிக்கட் ப்ளீஸ்.''—கண்டக்டர்.

அவனுக்குப் புரிந்தது. ஓரப் பார்வையால் பங்கஜத்தைக் கவனித்தான். அவள் அழுத்தலாகச் சிரித்தாள்.




நா. விசாலாட்சி

வத்சலா தன் சீட் பக்கத்தில் வந்து நிற்கும் அந்த அம்மாளை ஏறிட்டு நோக்கினாள். அவளுக்கு சுமார் ஐம்பது வயதிருக்கலாம். தும்பைப்பூ போல நரைத்த முடியை வாரி முடிந்திருந்தாள். பின்சீட்டில் உட்கார இடம் இருந்தும் அவள் ஏன் அங்கே உட்காராமல் தன்னருகே வந்து நிற்கிறாள்? வத்சலாவின் உள்ளத்தில் சந்தேகப்புயல் எழும்பியது. தன் மடியில் தூங்கிக் கொண்டிருந்த ரம்யாவின் கழுத்தில் கிடந்த சங்கிலியை மெதுவாக அவளுடைய கவுனுக்குள் தள்ளினாள்.

போனமாதமே வத்சலாவின் அம்மா குழந்தைக்கு எல்லா நகைகளையும் போட்டு போட்டோ எடுத்து அனுப்பும்படி கடிதம் போட்டிருந்தாள். அவளோடு ஸ்டூடியோ வரை துணைக்கு வருவதாக இருந்த அவளது கணவன் மௌளி கடைசி நிமிஷத்தில் தான் ஆபிசிலிருந்து வரமுடியாதென்றும் டவுனிலிருக்கும் ஸ்டூடியோவுக்கு அவளையே போய் வரும்படியும் ஃபோன் செய்துவிட்டான்.

அரைத்தூக்கத்தில் எழுந்த ரம்யா அழ ஆரம்பித்தாள். வத்சலா தன் காலடியிலிருந்த ஒயர் கூடையிலிருந்து ஃபீடிங் பாட்டிலை எடுப்பதற்குள் பக்கத்தில் நின்றிருந்த அந்த அம்மாள் ரம்யாவின் கையைப் பிடித்துக்கொண்டிருந்தாள். வத்சலாவுக்குப் பகீரென்றது. அவள் குழந்தையின் கைகளை அவசரமாக ஆராய்ந்தபோது அவள் பயந்தபடி வளையல்கள் எதுவும் காணாமல் போகவில்லை.

''பின் சீட்டில்தான் இடமிருக்கே போய் உட்காருங்களேன்!'' எரிச்சலுடன் வத்சலா சொல்ல ஆரம்பித்தபோது அவள் பக்கத்தில் உட்கார்ந்திருந்த பெண் அந்த பஸ் ஸ்டாப்பில் இறங்குவதற்காக எழுந்துவிட்டாள். சட்டென்று இவ்வளவு நேரமாக அவள் பக்கத்தில் நின்றுகொண்டிருந்த அந்த அம்மாள் அவளுக்குப் பக்கத்திலேயே நெருக்கமாக உட்கார்ந்து கொண்டாள்.

ரம்யா பாலைக் குடிக்கும் வரை காத்திருந்த வத்சலா அவள் பாட்டிலைக் காலி செய்தவுடன் தான் பக்கத்து சீட்டிலிருந்த காலி இடத்துக்குப் போய்விடலாமென அவசரமாக எழுந்தாள். உடனே அந்தப் பெண்மணி வத்சலாவின் கையைப் பிடித்து இழுத்து, ''ஏம்மா... பஸ்ஸிலே ஏறினதிலேந்து நான் கவனிச்சுக்கிட்டு வரேன்! குழந்தைக்கு இவ்வளவு நகையைப் போட்டுக் கூட்டிக்கிட்டு தன்னந்தனியாவா வரே?'' என்று கேட்ட போது வத்சலா பதில் சொல்லாமல் முகத்தைத் திருப்பிக் கொண்டாள்.

அந்த அம்மாள் அவளை விடவில்லை. ''போன வருஷம் என் மக இப்படித்தான் நகை நட்டெல்லாம் போட்டுக் கூட்டிக்கிட்டுப் போயி அவ மகளைப் பறிகொடுத்துட்டா! அது ஞாபகம் வந்ததனாலேதான் நான் உன்னையே சுத்திச்சுத்தி வரேன்!''

வத்சலா உடனே ரம்யாவை அவள் மடியில் கிடத்திவிட்டுச் சிரித்தாள்.



# ராமவேலனின் கடைசி ஆசை

ஜெயில் சூப்பிரெண்ட் ராஜேஷின் மனம் குழப்பத்தில் இருந்தது.

தூக்கு மேடைக் கைதி ராமவேலனின் கடைசி ஆசைதான், இந்தக் குழப்பத்துக்குக் காரணம்.

தான் தப்பிப்பதற்காகச் சட்டத்தின் துணையை அவன் நாடவில்லை. நீதியின் சன்னதியில் தண்டனையை ஏற்றுக் கொள்ளவே தயாராக இருந்தான். வக்கீல் வைக்கவில்லை; வாதாடவில்லை.

''நீதிபதி அவர்களே, என்னை மணப்பதாகச் சொல்லித் துரோகம் செய்த பெண்ணை நான் கொன்றேன். தடுக்க வந்த இரண்டு பேரையும் கொன்றேன்'' என்று ஒப்புக் கொண்டான். நீதிபதியும் தயங்காமல் மரண தண்டனை தந்துவிட்டார்.

நாளை அவனுக்கு தூக்கு.

''ராமவேலா, உனக்கு ஏதாவது கடைசி இருந்தால் சொல்லப்பா'' என்று ராஜேஷ் அவனைக் கேட்டபோது—

''நீங்க கேட்டதாலே சொல்கிறேன். நான் அனாதை மாதிரி அரசாங்கச் செலவிலே புதைக்கப்படவோ எரிக்கப்படவோ கூடாது. என்னை யாராவது கௌரவமா, உரிமையா எடுத்துக்கொண்டுபோய் அடக்கம் பண்ணலாம்'' என்றான் ராமவேலன்.

அதுதான் ராஜேஷுக்குக் குழப்பம். ஏனெனில் ராமவேலனின் உறவினர் யாரும் அவனைத் தங்கள் குடும்பத்தவனாக ஏற்றுக்கொள்ளத் தயாராயில்லை. யாரிடம் ஒப்படைப்பது?

மேஜைக்குத் திரும்பினார்.

ராமவேலனைப் பார்ப்பதற்காக ஒருவர் காத்திருப்பதாய் ஆர்டர்லி சொன்னார்.

பருத்த மனிதர் ஒருவர் வந்தார்.

''நாளைக்கு ராமவேலனுக்குத் தூக்கு' என்று கேள்விப்பட்டேன். அவன் உயிரோட இருக்கிறபோதே நன்றி சொல்லணும்... அவன் குடும்பத்துக்கு ஏதாவது உதவி செய்யணும்...''

ராஜேஷ் அவரைப் புன்னகையுடன் நிமிர்ந்து பார்த்தார்.

''அவன குடும்பத்துக்கு உதவி வேண்டாம். அவனுக்குத்தான் வேண்டும். அவனோட பாடியை உங்க சொந்தச் செலவிலே தகனம் பண்ணணும். 'ராமநாதனுடைய சடலத்தை நான் வாங்கிக்கறேன். நான் அவருக்கு வேண்டியவர்'னு எழுதிக்கொடுங்க,'' என்றார்.

வந்தவர், ''செய்யறேன், சார்,'' என்று சொல்லி எழுதிக் கொடுத்தார்.

''இவ்வளவு செய்கிறீர்களே, நீங்கள் யார்?'' என்று கேட்டார் ராஜேஷ்.

''மூன்றாவது கொலை படத்தை நான்தான் எடுத்தேன். அந்தப் படத்தைப் பார்த்து, அதிலே கதாநாயகன் கொலை செய்கிற மாதிரிதான் ராமவேலன் கொலை செய்ததாய்ச் சொன்னதும், பேப்பர்களில் செய்தி வெளியானவுடன் படத்துக்குப் பெரும் பப்ளிசிடி கிடைத்தது. எனக்குப் பெருத்த லாபத்தைக் கொடுத்தது...'' என்றார்.

ஷோபா லலித்.

# என் மகனா, கொக்கா?



''அடுத்தபடியாய்க் கொடுக்கல் வாங்கல் பேசுவோம். என்ன சீர் செய்வீர்கள்?''

''நகை பத்து பவுனுக்குப் போடுகிறோம்.''

''போதாது. பதினைந்து பவுன் தான் இப்போதைய மார்க்கெட் நிலவரம். மேலே சொல்லுங்கள்.''

''பர்னிச்சர் வகையறாவுக்கு மூவாயிரம்.''

''உம்.... பாத்திரம் எஸ்டிமேட் எப்படி? வெள்ளி, எவர்சில்வர், பித்தளை ஒவ்வொன்றையும் தனித்தனியாகச் சொல்லணும்.''

''எவர்சில்வர் ஆயிரம், பித்தளைப் பாத்திரம் ஆயிரம் தருகிறோம். ஆனால்....''

''சொல்லுங்கள்.''

''வெள்ளி விற்கும் விலையில்.....''

''புரியுது. வெள்ளி விலை எங்களுக்கு மட்டும் தெரியாதா? சாப்பாடு தட்டாவது வெள்ளியில் இருந்தால்தான் கௌரவம். சரி, அது போகட்டும். வாட் அபௌட் ஸ்கூட்டர்?''

''ஸ்கூட்டரா.....'' புருவம் சுருக்கினார் வரதராசன். ''சீர் வரிசையில் நாங்கள் அதைக் கமிட் பண்ணிக்கவில்லையே?''

''நாங்கள் கமிட் பண்ணிட்டோமே, பையனுக்கு வாங்கித் தருவதாக.'' விட்டேற்றியாய்ச் சிரித்தார் நந்தகோபால்.

சிறிது நேரம் மோவாயைத் தடவிக் கொண்டிருந்தார் வரதராசன்.

''கிளார்க் உத்தியோகம் பார்க்கிற உங்கள் பையனுக்கு நீங்கள் கேட்கும் சீர்கள் ரொம்பவும் அதிகமாய்த் தோணுது.''

குபீரெனச் சிரித்து அடங்கினார் நந்தகோபால். ''என் பையனுக்குக் கிளார்க் உத்தியோகமாய் இருக்கலாம், மிஸ்டர் வரதராஜன். ஆபீசில் என் பையனுக்கு ஓவர்டைம் சக்கரவர்த்தி என்று பெயர். அப்படி ஒரு நாள்கூட விடாமல் ஓவர்டைம் பார்ப்பான். ஓ.டி.யில் மட்டுமே மாதம் அறுநூறு ரூபாய் கிடைக்கும். அதுமட்டும் இல்லை. ஒரு விடுமுறையில் கூட வீட்டிலே தங்க மாட்டான். 'ஹாலிடே டியூட்டி' எடுத்துக்குவான். அதுவேறே தனியா வரும். அது போகட்டும். லீவாவது எடுப்பான் என்கிறீர்களா? கிரெடிட்டில் உள்ள லீவை எல்லாம் என்காஷ் பண்ணிடுவான்.''

''அப்படியா?''

''பார்த்தீங்களா.... நீங்களே இப்ப மலைச்சிட்டீங்க.''

''சாரி மிஸ்டர், நந்தகோபால்.''

''என்ன.... என்ன!'' பதறி எழுந்தார், நந்தகோபால்.

''எங்கள் பெண்ணுக்கு வரக்கூடிய மாப்பிள்ளை, ஒரு மனிதனாய் இருக்க வேண்டும். அப்போதுதான் வாழ்க்கை ரசிக்கும். ஆனால், சதா நேரமும் ஆபீசிலேயே பழியாய்க் கிடக்கிறதைப் பார்த்தால் உங்கள் பையன் வேலை செய்யற மெஷின் மாதிரி தோணுது. அதனாலே....''

''அதனாலே?''

''சீர் எதுவும் இல்லாமல் கேட்டால்கூட உங்கள் பையனுக்கு நாங்கள் பெண் தருவதாக இல்லை.'' உறுதியாகச் சொல்லிவிட்டு எழுந்து கொண்டார் வரதராசன்.

தமிழினியன்



# சட்டப்படி...

சுகுணா எதிலே சோடை போய் விட்டாள்? தட்டெழுத்து, சுருக்கெழுத்து தேர்வுகளில் ஹையர் பாஸ் பண்ணியிருக்கிறாள். புக் கீப்பிங் தேறியிருக்கிறாள். எல்லாவற்றிலும் நல்ல மதிப்பெண்கள். என்ன பிரயோசனம்? இதுவரை பன்னிரண்டு இடங்களில் வேலைக்கு விண்ணப்பித்து இன்டர்வியூவுக்கும் போய் விட்டாள். வேலை கிடைக்கவில்லை.

பொறுத்துப் பொறுத்துப் பார்த்த மார்க்கபந்து—அவள் தந்தை—கடைசியில் ஒரு காரியம் செய்யத் துணிந்து விட்டார். அவருடைய மைத்துனர் ஒருவர் தாசில்தார் ஆபீசில் கம்யூனிட்டி சர்டிபிகேட் வழங்கும் பிரிவில் குமாஸ்தாவாகப் பணியாற்றுகிறார். அவரைப் பிடித்தார். சுகுணா தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்தவள் என்று ஒரு போலி சர்டிபிகேட் தயார் பண்ணும்படி சொன்னார்.

சுகுணா தாயாரிடம், ''அப்பா இப்படியெல்லாம் சட்ட விரோதமான மோசடி செய்வது எனக்குப் பிடிக்கவில்லை அம்மா,'' என்று குறைபட்டாள்.

''எல்லாம் உன் அப்பாவுக்குத் தான் தெரியும். பேசாமல் அப்பா சொன்னபடி செய்,'' என்று சமாதானம் செய்தாள் அம்மா.

கிட்டத்தட்ட மூன்று மாதமாயிற்று. சுகுணாவுக்கு வேலைக்கே ஆர்டர் வந்துவிட்டது.

சுகுணா வேலைக்குப் போகும் நேரத்தில் அவர் ஊரில் இல்லாமல் போய் விட்டாரே! ஏதோ காண்டிராக்ட் விஷயமாய் வெளியூர் போயிருந்தார்.

அன்றைக்குத் திரும்பி வந்து பஸ் நிலையத்தில் இறங்கிய போதே பேப்பர்காரர், ''சார், உங்க டாட்டருக்கு வேலை கிடைச்சிட்டதே. யாரைப் பிடிச்சீங்க?'' என்று விசாரித்தார்.

மார்க்கபந்துவுக்குத் தலை கொள்ளாத பெருமை. தான் வைத்த குறி தப்பவில்லை. பரவாயில்லை. சர்டிபிகேட் அளவில் தன் பெண் தாழ்த்தப்பட்ட பிரிவைச் சேர்ந்தவளாய் இருந்து விட்டுப் போகட்டும். தன் மகளுக்கு உத்தியோகம் கிடைத்ததே, அது போதும்.

''சுகுணாவுக்கு வேலை கிடைத்து விட்டது...'' தாய் தயங்கியவாறு சொன்னாள். மகள் அதுவும் சொல்லாமல் தலைமறைவாய் இருந்தாள்.

''ஓ, மனச்சாட்சி சுடுகிறதாக்கும்!'' என்றார் மார்க்கபந்து எகத்தாளமாக. ''என்ன பண்ணுவது? அவர்கள் சட்டம் அப்படி. அதிலே சந்து பொந்து தேடி நாம்தான் முன்னுக்கு வர வேண்டும். தாழ்த்தப்பட்ட வகுப்பு என்று போலி சர்டிபிகேட் தயார் பண்ணித் தந்திராவிட்டால் வேலை கிடைத்திருக்குமா?''

அவர் சொல்லிக் கொண்டிருந்த போதே அவருடைய மைத்துனர்—அந்தத் தாசில்தார் ஆபீஸ் குமாஸ்தா—அங்கு வந்தார். ''அத்தான்! உங்களுக்கு விஷயமே தெரியாதா? நான் அப்படி ஏதும் போலி சர்டிபிகேட் தயார் பண்ணி அனுப்பலே. இது வந்து.....'' தடுமாறினான்.

''அப்படியானா முறைப்படியா இவளுக்கு வேலை கிடைத்தது?'' மார்க்கபந்துவால் நம்ப முடியவில்லை.

''இல்லை. தாழ்த்தப்பட்ட பிரிவு கோட்டாவில்தான் கிடைத்தது,'' என்று வேலைக்கான ஆர்டரைக் காட்டினாள் சுகுணா.

அதில் அவளுடைய பெயர் சுகுணா ராமதாஸ் என்று இருந்தது!

''மன்னியுங்கள் அப்பா, சட்ட விரோதமாய் என்னைத் தாழ்த்தப்பட்ட பிரிவில் சேர்க்கத் துணிந்தீர்கள். நான் சட்டப்படியே தாழ்த்தப்பட்டவளாகி, அதற்கான சலுகையை அடைந்தேன். ஆமாம் அப்பா. உங்கள் சம்மதமில்லாமல் நான் காதலித்துக் கல்யாணம் செய்து கொண்ட ராமதாஸ், தாழ்த்தப்பட்டவர். எங்களை ஆசீர்வதியுங்கள்,'' என்றாள். உள்ளேயிருந்து வந்த இளைஞனுடன் அவர் காலடியில் விழுந்தாள்.

எஸ். ராஷ்மி




"ஸ்ரீமதி! உன்னைப் பார்க்கணும்னு வாசலலே ரொம்ப நேரமா ஒரு ஆள் உட்கார்ந்திருக்காண்டி." அலுவலக இடைவேளையின்போது வெளியே போய்ச் சாப்பிட்டு வந்த தோழி ஒருத்தி ஸ்ரீமதியிடம் சொன்னாள்.

ஸ்ரீமதி சற்றே எரிச்சலுடன் ரிசப்ஷனுக்கு வந்தாள்.

"வணக்கம்மா," என்று வந்தவன்—ஆட்டோ டிரைவர் மாதிரி இருந்தவன்—கும்பிடு போட்டுவிட்டு, "அதான் அந்தோனியம்மா கட்டாயமா உங்களை இன்னைக்கு வரச் சொல்லிச்சு. போன வாரமே வர்ரன்னீங்க. நானேதான் வந்து சொன்னேன். ரொம்ப எஸ்பட் பண்ணிட்டிருக்காங்க. சாயந்தரமா வர்ரீங்களா?"

"முடிஞ்சா வர்ரேன்னு சொல்லு."

அவளுக்கு எரிச்சலாக வந்தது.

மிஸஸ் அந்தோனி அதே காரியாலயத்தில் ஸ்ரீமதியின் இலாகாவில் ஸ்டெனோவாக இருந்து உடம்பு சரியில்லாமல் ஓய்வு பெற்ற கிழவி. பெருத்த சரீரம். எடுப்பான பல் வரிசை. கறார். அவசரத்துக்கு ஒரு ரப்பர் இரவல் கேட்டால்கூட அவளிடம் மற்றவர்கள் சுலபத்தில் வாங்க முடியாது. இரவல் கொடுத்தாலும், உடனே கையோடு பக்கத்தில் நின்று வாங்கிக்கொண்டு போய் விடுவாள். முசுடு என்று எல்லோரும் அவளிடம் ஒட்டாமல் விலகி இருந்தார்கள். அவளும் ஒட்டமாட்டாள். ஸ்ரீமதி மட்டும் விதிவிலக்கு.

மிஸஸ் அந்தோனி ஓய்வு பெற்றுச் செல்லும்போது, ஸ்ரீமதியிடம் மட்டும் ஸ்பெஷலாகச் சொல்லிக்கொண்டு போனாள். "பேபி, மறந்துடாதே ஆன்ட்டியை. அப்பப்ப வந்து பாரும்மா. பஸ்ஸுக்கு நீ எழும்பூர்ல நிற்பியே... அதே பஸ்ஸ்டாப்பண்டையே மாடியிலேதான் வீடு," என்று சொல்லிக்கொண்டு சென்றாள்.

கடைசியாக ஸ்ரீமதி போய்விட்டு வந்து மூன்று மாசமாகிவிட்டது.

கிழவிக்கு ஏதாவது உடம்பு கிடம்பு மோசமாயிட்டுதோ? இல்லே, பணம் கிணம் கடன் கேட்கப் போகிறாளோ? எதற்கு வாவான்னு கலகமாகச் சொல்லி அனுப்பியிருக்கிறாள்? எப்படியாவது இன்று போய்விடுவது என்று ஸ்ரீமதி இருந்தாள்.

கிழவி மிகவும் இளைத்துப் படுத்த படுக்கையில் இருந்தாள். ஸ்ரீமதிக்கு உண்மையில் அவளைப் பார்க்கத் திக்கென்றது. எப்படி ஒரு இளைப்பு. முகத்தில் 'அந்தக் களை' வந்துவிட்டது போலிருந்தது.

மிஸஸ் அந்தோனி ஸ்ரீமதியின் கைகளைப் பற்றிக்கொண்டாள். கண்கள் மலமலங்க விழித்தன. லேசாகக் கண்ணீர். ஏதோ சொல்ல வாயெடுத்தாள். பேச வரவில்லை.

"சொல்லுங்க ஆன்ட்டி..."

ஸ்ரீமதியின் முகத்தையே வாஞ்சையுடன் பார்த்துக்கொண்டிருந்தாள். ஸ்ரீமதிக்கு மனசு திக்திக்கென்றது. கிழவி என்ன சொல்லப் போகிறாளோ? கேட்கப் போகிறாளோ?

"பேபி," கிழவியின் குரல் தழதழத்தது. முகத்தில் மட்டும் பிரகாசமான மலர்ச்சி. "ஒண்ணுமில்லேம்மா." என் மேலே உண்மையாகப் பிரியமுள்ளவங்களைப் பார்த்து ஒரு ரெண்டு நிமிஷம் பேசிட்டிருக்க மாட்டோமான்னு தவிப்பாயிருந்தது. அதான் சொல்லி அனுப்பினேன்."

ஸ்ரீமதிக்குக் கண்ணில் நீர் வந்துவிட்டது. கிழவியின் கையைப் பற்றிக் கொண்டாள். அதற்கே காத்திருந்தது போல் கிழவியின் தலை சாய்ந்தது.

---

'ஜான்ஸி'

‘தருமன்’

# சாந்தினி குளிக்கிறாள்



சாந்தினிதான் முதலில் குளிப்பதாக இருந்தாள். குளியல் அறையில் துணியெல்லாம்கூடக் கொண்டு போய் வைத்துவிட்டாள். அதற்குள் அவள் அப்பா, தான் அவசரமாய் வெளியில் போகவேண்டும் என்று குளியலறையில் புகுந்துவிட்டார்.

அடே! மாமா பெண் சாந்தினி குளித்துக் கொண்டிருக்கிறாள்! பாலுவுக்குள் ஒரு சிலிர்ப்பு. அவள் குவளையில் மொண்டு ஊற்றிக் கொள்ளும் போது தண்ணீர் தெறிக்கும் ஓசை அவனுள் கிளுகிப்பை ஏற்படுத்தியது.

சந்தன சோப்பின் மணம் மேலே உள்ள இடைவெளி வழியே வந்து கொண்டிருந்தது. அவளுடைய சிவந்த உடலைச் சோப்பின் வெள்ளை நுரை மூடியிருக்கும். அந்தச் சோப்பு நுரையாய்த் தான் இருந்திருக்கக் கூடாதா என்று உள்ளம் ஏங்கிற்று.

ஆனால் இந்த மாமா.... நேற்று அவன் அம்மாவிடம், ‘‘உன் பிள்ளை படிப்பில் ஏனோதானோவென்று இருக்கிற மாதிரி தானே வாழ்க்கையிலும் இருப்பான்? தங்கச்சி, இவனை நம்பி என் பொண்ணைத் தாரை வார்க்க முடியாது,’’ என்று சொல்லிவிட்டாரே!

நேற்று மாமாவுடன் சாந்தினி ஊரிலிருந்து வந்தாள்—இரண்டு வருடத்துக்குப் பிறகு இப்போதுதான் சாந்தினியைப் பார்க்கிறான் பாலு. ஆகா! என்ன வளர்ச்சி, எப்படியொரு திரட்சி! அவளை அணு அணுவாய் விழுங்க வேண்டும் என்று துடித்துக் கொண்டிருந்தான்.

‘‘பாலு....’’ அம்மாவின் குரல். சே!

‘‘இதோ, பல் தேய்ச்சிட்டு வரேம்மா.’’ குளியலறைக்கு வெளியே இருந்த வாஷ் பேசின் குழாயைத் திருப்பினான்.

திக்கென்றது. அதில் தண்ணீர் வரவில்லை. அப்படியானால் குளியலறையிலும் தண்ணீர் வராதே. ஹீட்டரில் ‘சேஃப்டி வால்வ்’ வேலை செய்யவில்லை. தண்ணீர் வராத ஹீட்டர் வெடித்து சாந்தினிக்கு ஏதும் ஆபத்து நேர்ந்தால்.... உடனே அணைத்தாக வேண்டும். அணைத்து, சாந்தினியைக் காப்பாற்றி, அவள் காதலைப் பெற வேண்டும்....

பாத்ரூம் கதவுக்குக் கொக்கித் தாழ்ப்பாள் தான். முண்டாவில் நெட்டினான். கதவு மடேர். பாய்ந்து ஸ்விட்சை அணைத்தான். அதே வேகத்தில், குளித்துக் கொண்டிருந்த...

இடுப்பில் துண்டோடு நின்ற மாமா, ‘‘பரவாயில்லே. எனக்கு ஒண்ணும் ஆகலே,’’ என்றார்.

இடிந்து போனான் பாலு.

ஹூம்! இந்த மாமாவைக் காப்பாற்றவா இந்தப் பாடு!

அன்று மாலை—வெராந்தாப் பக்கம் வந்தான். அங்கு தன் தாயுடன் மாமா பேசிக் கொண்டிருப்பதைக் கேட்டு நின்றான்.

‘‘தங்கச்சி, நான் உன் பிள்ளையைப் பற்றிச் சொன்னதையெல்லாம் மனசிலே வைத்துக் கொள்ளாதே. உங்கள் வீட்டு ஹீட்டர் பற்றி எனக்குத் தெரியாது. இன்றைக்குக் காலையில் பாத்ரூமில் அவன் மட்டும் சமயத்தில் வந்து காப்பாற்றாமல் இருந்திருந்தால் என் உயிருக்கே ஆபத்தாகிப் போயிருக்குமாமே. சாந்தினிதான் சொன்னாள். என் மகளுக்கு அவனைவிடப் பொறுப்பான புருஷன் கிடைப்பான் என்று எனக்குத் தோன்றவில்லை... என்று அவர் சொல்லிக் கொண்டிருந்தார்.

பாலு சாந்தினியிடம் ஓடினான். ‘‘அப்படியா?’’ என்று கேட்டான்.

‘ஆமாம்’ என்று தலையசைத்து நமட்டுச் சிரிப்புச் சிரித்தாள் அவள்.

# நாலு முழ வேட்டிக் காரன்

'கலைச்செழியன்'



"ராமசாமி, பந்தி பரிமாறியாச்சு போலிருக்கு; எல்லோரும் போகிறாங்களே, நாமும் போகலாமா?"

"கூட்டம் அதிகமால்ல இருக்கு. வாசற்படிக்குள் நுழைய முடியாமல் தவிக்கிறதைப் பார்த்தில்லே. அடுத்த பந்திக்குப் போகலாம்."

"என்ன ராமசாமி நீ? உன் மாப்பிள்ளை வீட்டுக் கிரகப்பிரவேசத்துக்கு வந்துவிட்டு ஒதுங்கி உட்கார்ந்திருக்கே? கோவிந்தன்தான் அவசரப்படுறானே, எழுந்திரு, போகலாம்."

"எதற்கு இடிச்சுப் புடிச்சிட்டுப் போகணும்னு பார்த்தேன். வேறொண்ணுமில்லே, மாணிக்கம்."

"அதற்காகப் பார்க்கலே நீ. பாண்ட்டும் சட்டையுமாகப் போறவங்க பின்னால் நாம எப்படி போறதுன்னு கூச்சப்படறேன்னு நினைக்கிறேன். வேட்டியும், துண்டுமாகக் கிராமத்திலே இருந்து வந்திருக்கோம்... அதோ உன் மாப்பிள்ளையே ஒவ்வொருத்தராக உள்ளே அனுப்பிச்சிட்டிருக்கார், பார்!"

"எட்டு, ஒன்பது, பத்து.... அடடே, மாமாவா? உங்ககூட வந்தவங்க எத்தனை பேர்?"

"ஐந்து பேர். என்னையும் சேர்த்து ஆறு.... ஒன்பதும் ஆறும் பதினைந்தாச்சு. பின்னால்தான் வர்றாங்க."

"கணக்குக்குச் சொல்லவில்லே மாமா. அவுங்களும் நீங்களும் கொஞ்ச நேரம் இப்படி இருங்கள், கூப்பிடறேன்."

"பார்த்தியா ராமசாமி நம்மை இங்கே இருக்கச் சொல்லிட்டுப் போறார் உன் மாப்பிள்ளை! அவமானமா இருக்குது! படிச்சு வேலையிலே இருக்கிற பையனாச்சே நம்மை மதிச்சு வீடு தேடி வந்ததேன்னு வந்ததற்கு வகையா வாங்கிக் கட்டிக்கிட்டாச்சு!"

"மாணிக்கம், கொஞ்சம் பொறுங்க. என் மாப்பிள்ளை அப்படி நெனைச்சிருக்க மாட்டார். கூட்டத்தோட கூட்டமாக எதுக்குக் கஷ்டம்னு...."

"மருமகனை விட்டுக் கொடுப்பியா ராமசாமி? என்ன கூட்டத்தோட கூட்டம்? உள்ளே போய் இலையில் உட்கார்ந்துட்டா பிறகு என்ன கஷ்டம்?"

"இதையே நம்ம மருமகன்கள் வீட்டில் நடந்திருந்தா ராமசாமி வந்திருந்தால் எப்படிக் குதிப்பார் தெரியுமில்லே?"

"அடடே.... நீங்க இங்கேயா நிக்கறீங்க? நான் தோட்டத்துப் பக்கத்திலே போய் பார்த்திட்டு வர்றேன்... மாமா, தவறாக நினைக்கக் கூடாது. அவர்கள் 'பேண்ட்' போட்டிருக்கிறார்கள். சம்மணம் போட்டு உட்கார முடியாது. அதனால் சேர் போட்டு, டேபிளில் இலையில் பரிமாறிச் சாப்பிடுகிறார்கள். உங்களுக்கு அப்படி கால்களைத் தொங்கவிட்டுச் சாப்பிட்டால் சாப்பிட்ட திருப்தி இருக்காது. வாங்க. காக்க வச்சதுக்கு நீங்க எல்லாரும் மன்னிக்கணும். அதனால்... முன் அறையில் தனியாகப் பரிமாறி இருக்கனே. வாங்க..."

"என்ன ராமசாமி! மாப்பிள்ளை கூப்பிடறார் நிற்கிறியே. வா, மாணிக்கம்... கோவிந்தா... விஸ்வலிங்கம், வாங்க சாப்பிடப் போகலாம்."

# யாருக்கு ஓட்டு?



சிங்காரத் தோப்புத் தொகுதி அல்லோலகல்லோலப் பட்டது. கட்சி வேட்பாளர்களாய்ப் போட்டியிட்ட முக்கியப் புள்ளிகள் இருவர்: ஒருவர் பால கோபால். இன்னொருவர் தில்லை கணேசன். பாலகோபாலிடம் கட்சிப் பணம் எக்கச்சக்கமாய் விளையாடியது. தில்லை கணேசனிடம் மக்களுக்கு ஆதரவு இருந்தாலும் சில்லறைப் பஞ்சம்.

தேர்தல் சீசனின்போது கிளம்பும் திடீர்த் தொண்டர்களில் முருகேசன் அந்த வட்டாரத்தில் பிரபலமானவன். பால கோபாலுக்காக வேலை செய்தான். சம்பந்தம் இருக்கிறதோ இல்லையோ சைக்கிள் ஊர்வலத்துக்குத் தலைமை தாங்கி, 'தில்லை கணேசன் அண்ணாச்சி, உங்க கொல்லைக் கிணறு என்னாச்சி?' என்று அவன் குரல் கொடுத்தால் ஊர் ஜனமே திரும்பிப் பார்க்கும். விஷயம் ஒன்றுமில்லை. தண்ணீர்ப் பஞ்ச காலத்தில் வேட்பாளர் தில்லை கணேசன் வீட்டுக் கொல்லைக் கிணற்றில் மட்டும் தண்ணீர் இருக்கும் போது, அதைத் தெரு மக்களுக்குத் திறந்து விடாமல் போய்விட்டாராம். அதைக் குத்திக் கிளப்பும் கோஷம்.

இந்த வகைக் கோஷத்தால் அந்த வட்டார ஜனங்களுக்குப் பிரபலமாகி யிருந்தான் முருகேசன். குடிசை மாற்று வாரியம் கட்டிடத்தை அடுத்த திடீர்க் குப்பத்தில் மனைவி பாக்கியம், நாலு வயது மகன் செந்திலுடன் குடித்தனம்.

அன்று தேர்தல் நாள். ''ஐயே, ஊர்கோலம், கூட்டம் எல்லாம்தான் முடிஞ்சு போச்சே. இன்னும் எதுக்கு லோலோன்னு அலையறே? ஓட்டுப் போட்டுட்டு நேரத்தோடே வீட்டுக்கு வரதுதானே? பாரு, நான்-போட்டுட்டு வந் தாச்சு.'' நக நுனியில் மைப் பொட்டைக் காட்டினாள் பாக்கியம்.

''யாருக்கு ஓட்டுப் போட்டே?''

''ஏன், நீதான் ஒரு வாரமா தொண்டை தண்ணி காயக் கத்தறியே, அந்த பாலகோபால் பேரைச் சொல்லி. மறந்துடுவேனா? அதுக்குத்தான் போட்டேன்.''

''என்னது!'' வெறி பிடித்தவன் போல் மனைவியின் தலை முடியை இழுத்துப் போட்டு மொத்து மொத்தென்று மொத்தினான் அவன்! அவள் வலி தாளாமல் அலறியதில் அக்கம் பக்கத்திலிருந்தெல்லாம் கூட்டம் சேர்ந்துவிட்டது. எதையும் லட்சியம் பண்ணாமல் ஆவேசமாய்க் கத்தினான். ''ரெண்டு காசு கிடைக்குதேங்கிறதுக்காக அந்தப் பால கோபாலுக்கு நான் வேலை செய்தேண்டி. அவனுக்குப் போய் ஓட்டுப் போடச் சொன்னேனா உன்னை? நல்ல மனுஷன் தில்லை கணேசனுக்கு ஓட்டுப் போடணும்னு சொல்றதுக்குள்ளே.....''

முருகேசனை யாரோ பிடித்துத் தள்ளினார்கள்!

அவன் எழுவதற்குள் அவனைச் சுற்றிக் கூட்டம் சேர்ந்துவிட்டது. வெறித்துப் பார்த்தான். அத்தனையும் பால கோபாலின் அடியாட்கள்!

''ஏண்டா, கை நீட்டிக் காசு வாங்கறது ஒருத்தனண்டை. ஓட்டுப் போடறது இன்னொருத்தனுக்கா? துரோகி!'' ஓர் இரும்புப் பிடியான கை முருகேசனின் வயிற்றில் இறங்கியது.

தொடர்ந்து பல தர்ம அடிகள், உதைகள்!

''ஐயா, ஐயா, அவரை விட்டிடுங்க!'' என்று பாக்கியம் ஓடி வந்து மறித்து, கணவனை அணைத்துக் கொண்டாள்.

தருமன்




## பி.ஆர். பார்த்தசாரதி

**எ**ன்கிட்டே ஒரு பழக்கம்— எங்கே போனாலும் எடை மெஷினில் எடை பார்த்துக் கொள்வேன்.

அன்றும் அப்படித்தான்.

சென்னைக்கு ரயிலேற வேண்டிய வன். அந்த அவசரத்திலும் எடை பார்த் தேன்.

59.5 என்று காட்டியது. என்ன அக்கிரமம்? போன வாரம் 60 கிலோ. இந்த வாரம் அரைக் கிலோ குறைந்து விட்டதே! இனி எப்படியாவது உடம்பைத் தேற்றிக் கொள்ள வேண்டும்....

அட்டையின் பின்புறத்தில் உள்ள ஜோசியத்தைப் பார்க்க ஆவலுடன் திருப்பினேன். 'இது உனக்கு மிகவும் சோதனையான காலம். சோதனையிலிருந்து மீள்வது சிரமமாயிருக்கும்,' என்று எழுதி யிருந்தது.

கல்கத்தா, டில்லியிலிருந்து உறவி னர்கள் குழந்தைகளுடன் வந்தது போதாதா?

குழந்தைகளின் அட்மிஷனுக் காக அலைவது போதாதா?

மேலும் மேலும் சோதனைகளா?

சோழன் எக்ஸ்பிரஸ் பிளாட் பாரத்திற்கு வரவே, ஜன்னல் ஓரமாய் இடம் தேடி ஏறி அமர்ந்தேன்.

ரயில் வேகமாகப் போய்க் கொண்டிருந்தது.

என் எண்ணம் மட்டும் அந்தச் 'சோதனை'யையே சுற்றிச் சுற்றி வந்தது. எடை மெஷின் மீதும் அதன் ஜோசியத்தின் மீதும் வெறுப்பு ஏற்பட்டது. பேண்ட் பாக் கெட்டிற்குள் கையை விட்டேன். எடை அட்டையைத் தூக்கியெறிந்தேன்!

இனி எடையே பார்ப்பதில்லை. அப்படிப் பார்த்தாலும் பின்புறம் உள்ள ஜோசியத்தைப் பார்ப்பதில்லை!

மயிலாடுதுறை வந்தது.

கறுப்புக் கோட், காக்கி பேண்ட் டுடன் டி.டி.ஆர். வந்தார். ''சார், டிக்கெட் ப்ளீஸ்,'' என்ற அவர் குரல் என் சிந்தனையைக் கலைத்தது.

டிக்கெட்டை அவரிடம் நீட்டி னேன்.

''மிஸ்டர்.... உங்க எடை என்ன வென்று எனக்குக் கவலை இல்லை. உங்க ரயில் டிக்கெட்டை மட்டும் கொடுங்க,'' என்றார்.

தூக்கிவாரிப் போட்டது. மாற்றி மாற்றி இரண்டு பாக்கெட்டிலும் கையை விட்டுப் பார்த்தேன். டிக்கெட் இல்லை. அப்படியானால்.....

நான் தூக்கி எறிந்தது எடை டிக்கெட் அல்ல! கும்பகோணத்திலிருந்து சென்னை செல்ல வாங்கிய ரயில் டிக்கெட்!

''ஏனய்யா, பார்த்தால் படிச்ச ஆளு மாதிரி தெரியறீங்க? டிக்கெட் வாங் காமல் வரதுக்கு வெட்கமா இல்லே?'' டி.டி.ஆர். அடுக்கிக் கொண்டே போனார்— அபராதம் கட்டும்படி சொல்லி ரசீது எழுதி னார்.

'சோதனை' என்ன என்று எனக்குப் புரிந்துவிட்டது.

# யார் அந்த வி.ஐ.பி.



## ஆர். பாண்டித்துரை

பஸ் ஸ்டாண்டில் ஒரே கூட்டம். ஏறத்தாழ அரை மணி நேரமாக நானும் பஸ் வராமல் தவித்துக் கொண்டிருந்தேன்.

என் அருகில் வந்து நின்ற அந்த மஸ்லின் ஜிப்பாக்காரர் என்னைக் கவர்ந்தார். இவர் அதிர்ஷ்டத்தில் எனக்கும் பஸ் கிடைத்துவிடலாம் என்று தோன்றியது.

திடீரென்று எங்கள் பஸ் ஸ்டாண்டின் வழியாகப் போய்க் கொண்டிருந்த ஒரு கார் மந்திரத்தால் கட்டுண்டது போல எங்கள் அருகில் வந்து நின்றது. அதை ஓட்டி வந்த சொந்தக்காரர் அவசரமாக இறங்கி வந்து மிகவும் மரியாதையாக என் அருகில் நின்றிருந்த மஸ்லின் ஜிப்பா வேஷ்டிக்காரரை அணுகி வணக்கம் செலுத்தி, தன் காரில் ஏறிக் கொள்ளத் தாழ்மையுடன் கேட்டுக் கொண்டார்.

மஸ்லின் ஜிப்பாக்காரர் புன்முறுவலுடன் காரில் ஏறிக் கொண்டார். எனக்குப் பொசுக்கென்று போய் விட்டது.

கார் ஜெட் வேகத்தில் பறந்தது. ஆமை வேகத்தில் மக்கள் கூட்டத்தில் குடை சாயாமல் பாலன்ஸ் செய்து கொண்டு எங்கள் பஸ் வரவே, நான் அதில் தொற்றிக் கொண்டு ஊசலாடியபடி பிரயாணம் செய்து என் அலுவலகத்தை அடைந்தேன்.

அடுத்த நாளும் இதே கதை தான். பஸ் ஸ்டாண்டில் நிற்கும் பொழுது மறுபடியும் அந்த மஸ்லின் ஜிப்பா வேஷ்டிக் காரரை ஒரு ஜீப் டிரைவர் அதே போல் ஜீப்பை நிறுத்தி, இறங்கி வந்து வணக்கம் செலுத்தித் தன் ஜீப்பில் ஏற்றிக் கொண்டு செல்வதைக் காணும் துர்ப்பாக்கியம் எனக்கு ஏற்பட்டது.

இதுபோலவே தொடர்ச்சியாகப் பல நாட்கள்.

ஒரு நாள் அம்பாஸிடர் கார், ஒரு நாள் ஜீப், ஒரு நாள் பியட் கார். இப்படி ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு வாகனம்.

எனக்கு ஒரே புதிராக இருந்தது. யார் இந்த மனிதர்? ஆளைப் பார்த்தால் சாதாரணமாகத்தானே இருக்கிறார்? அரசியல்வாதிக்கான எந்த அம்சமும் இல்லையே? எந்த விதமான வி.ஐ.பி. இவர்? எப்படியாவது தெரிந்து கொள்ள வேண்டும்.

அடுத்த நாள் அவரிடமே நேரில் விசாரித்துவிட்டேன்.

பதில்?

அவர் ஒரு கார் ட்ரைவிங் ஸ்கூல் வைத்து நடத்துகிறாராம். அவரிடம் டிரைவிங் கற்றவர்கள் ஏராளமாம். அப்படிக் கற்றுக் கொண்டவர்கள் அவரைக் கண்டதும் காரை நிறுத்தி, வணக்கம் சொல்லி ஏற்றிச் செல்கிறார்களாம். மற்றப்படி வேறு எந்தவிதச் செல்வாக்கும் இல்லை என்றார் அவர்.



ஆடு மேய்ப்பவர் (தன் மகனிடம்):

உன்னையெல்லாம் படிச்சுப் பட்டம் வாங்க விட்டிருக்கணும்... போனாப் போகுதுன்னு ஆடு மேய்க்கவிட்டேன் பார்... அதான் இப்படி தலைக்கனத்தோட நடந்துக்கறே!

—எம். பாஸ்கர்




தாயில்லாப் பெண் என்று சுநந்தாமீது அவள் அப்பாவுக்குத் தனிப் பிரியம்.

சுநந்தா போ என்றால் போவார். போகாதே என்றால் போக மாட்டார். அவளுடைய இஷ்டத்துக்கு விரோதமாக இந்தப் பத்தொன்பது வருடங்களில் ஒரு மூச்சுக்கூட அவர் விட்டது கிடையாது.

ஆகவே அவளுக்குக் கல்யாணம் செய்துவைக்க வேண்டிய சமயம் வந்த போது—

''என்னம்மா சுநந்தா, யாரையாவது நீ மனசில் நினைத்திருக்கிறாயா? வெட்கப்படாமல் சொல்லு. அந்தப் பையனையே உனக்கு முடித்து வைக்கிறேன்,'' என்றார்.

சுநந்தாவுக்கு நாணமாக இருந்தது தன் மனசில் இருந்ததைச் சொல்ல.

''தயங்காமல் சொல்லம்மா,'' என்று அப்பா வற்புறுத்தவே, விரலை மெதுவே உயர்த்தி எதிர்வீட்டைச் சுட்டிக் காட்டினாள். முகத்தைப் பொத்திக் கொண்டாள்.

''ஓ, பரத்தா?'' என்றார்.

ஆமென்று தலையை அசைத்தாள் மகள்.

''ஏதோ புத்தகப் பிரசுரம் நடத்துகிறவன் என்று சொன்னார்கள். மரியாதைப்பட்ட பையன். வசதியாயும் லட்சணமாயும் இருக்கிறான்,'' என்று கூறியவர் அடுத்த ஏற்பாடுகளைக் கவனிக்கச் சென்று விட்டார்.

சுநந்தா மகிழ்ச்சி வெள்ளத்தில் நீந்தினாள்.

சென்ற ஆறு மாதமாகவே அவள் கவனித்து வருகிறாள்.

காலையில் அவள் வாசலுக்கு வந்தால் சொல்லி வைத்தாற்போல அவன் ஜன்னலருகே வந்து நிற்பான், அவள் அழகையே கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருப்பான். அவள் ஜாடையாகக் கண்களை உயர்த்தினால் அவன் பார்வை அவளையே மொய்த்திருப்பது தெரியும்.

**எம். உஷா**

அவனுக்குத் தன்மீது காதல் தானா என்று சோதிப்பதற்காக, கோலம் போடும் சாக்கில் மாலையிலும் ஒரு முறை வாசலுக்கு வந்தாள். அப்போதும் அவன் தவறாமல் வந்து நின்று பார்த்துக் கொண்டிருப்பதைக் கண்டாள்.

அதனால்தான் ஆசையாக அப்பாவிடம் சொன்னாள் அவனைப் பற்றி.

வெகு எளிதாகத் திருமணம் நடந்து விட்டது.

முதலிரவன்று அணைத்தபடி பரத் கேட்டான்: ''ஏன் சுநந்தா, தினம் தினம் நீ கோலம் போட்டுக்கொண்டிருக்கிறாயே, வகை வகையாய்? அதெல்லாம் யார் கற்றுக் கொடுத்தது?''

''என் பாட்டியிடம் கற்றுக் கொண்டேன். நூற்றுக் கணக்கில் எனக்குக் கோலங்கள் தெரியும். எதற்குக் கேட்கிறீர்கள்?''

''ஒன்றுமில்லை, தினம் நீ போடுகிற கோலத்தைப் பார்க்கிற போதெல்லாம், அவைகளை அழகாய்ப் புத்தகமாய்ப் போட்டால் கொள்ளையாய் விற்பனை செய்யலாமே என்று நினைத்துக் கொள்வேன். தப்பாய் எடுத்துப்பாயோ என்று பயமாயிருக்கும். இனிமேல் கவலையில்லை. நீ என் மனைவியாகவே ஆகிவிட்டாயே? நாளையிலிருந்து அதையெல்லாம் காகிதத்தில் வரைந்து கொடு... என்ன?''

சுநந்தா பதில் சொல்லவில்லை.



# சொன்னபடி ஸ்கூட்டர்

'தணிகை'

சச்சிக்குக் கல்யாணம். பெண், அவனது அலுவலகத்தில் தலைமை எழுத்தராய் இருக்கும் ஆறுமுகத்தின் மகள் நளினி.

கல்யாண மண்டபம் களை கட்டியிருந்தது. மாப்பிள்ளை அழைப்புக்குக் கார் தயாராய் இருக்கிறதா? வாத்தியக்காரர்கள் கோவிலுக்குப் போய் விட்டார்களா? யாரங்கே? பெண்டுகள் எல்லாம் வரிசைத் தட்டு எடுத்துக் கொண்டாயிற்று? தலைக்குத் தலை அதட்டல், அதிகாரம், கலகலப்பு.

அத்தனைக்கும் நடுவில் ஆறுமுகம் கண்ணில் எண்ணெய் விட்டுக்கொண்டு காவல் இருந்தார். சமையலுக்கு என்று எடுத்துப்போகப்பட்ட தேங்காய்களில் இரண்டை மீட்டு ஸ்டோர்ஸில் வைத்துப் பூட்டிவிட்டு, ''தேங்காய் விற்கிற விலையில் பொரியலுக்கு அது போதும்,'' என்றார். வாத்தியக்காரர்களைப் பார்த்து, ''பேசியது ஐந்து பேர்தான். எதற்கு ஏழு பேர் வருகிறார்கள்? இரண்டு பேரை அனுப்பி விடுங்கள்,'' என்று துரத்தினர்.

மாப்பிள்ளை ஊர்வலம் நடந்து கொண்டிருந்தது. ஆறுமுகத்திடம் அவருடைய நெருங்கிய நண்பர் விலாவில் இடித்து, ''தேவலையே. மாப்பிள்ளைக்கு ஸ்கூட்டர் எல்லாம் வாங்கித் தர போகிறதாகச் சொல்லியிருக்கிறாயாமே?'' என்றார்.

ஆறுமுகம் சுற்று முற்றும் பார்த்துவிட்டு இறங்கிய குரலில் சொன்னர். ''மண்ணாங்கட்டி! மூன்று மாசத்துக்கு முன்னல் என் ஸ்கூட்டரே திருட்டுப் போய் போலீஸில் கம்ப்ளெய்ண்ட் கொடுத்து வைத்திருக்கிறேன். இந்த அழகில் மாப்பிள்ளைக்குப் புதுசா ஒரு ஸ்கூட்டர் வாங்கிக் கொடுக்கிறேனாக்கும்? எல்லாம் சொல்லிக்க வேண்டியதுதானே? விரட்டும். அப்புறம் நளினி கவனிச்சுக் கொள்வாள் பயலை,'' என்று கண் சிமிட்டினர்.

''பாவி மனுஷா, பெரிய ஆளய்யா நீர்!'' அசந்து போனர் நண்பர்.

கல்யாணம் நல்ல விதமாய் முடிந்தது. மறுவீடு வைக்கும் சடங்குக்காகத் தாய் வீட்டுக்கு வந்த நளினி, பெற்றோருடன் மகிழ்ச்சியாகப் பேசிக் கொண்டிருந்தாள். இன்னும் சிறிது நேரத்தில் சினிமாவுக்கு அழைத்துப் போக சச்சி வந்துவிடுவான்.

வாசலில் ஸ்கூட்டர் வந்து நிற்கும் ஓசை கேட்டது.

எட்டிப் பார்த்த ஆறுமுகம் மலைத்துவிட்டார்.

பின்னலே வந்து பார்த்த நளினியின் கண்கள் விரிந்தன. ஸ்கூட்டரில் வந்திருந்தவன் சச்சி! ஆசையோடு அவனருகில் சென்று, ''ஏதுங்க ஸ்கூட்டர்? இரவல் வாங்கி வந்தீங்களா?'' என்றாள்.

''நம்மதுதான். ஏறிக்கொள்,'' என்று சச்சி சொன்னதும் பில்லியனில் அமர்ந்து அவன் இடுப்பை அணைத்துக் கொண்டு, ''வருகிறேன் அப்பா,'' என்று டாட்டா காட்டினாள் அவள். சச்சியும், ''டாட்டா மாமா,'' என்று சிரித்தபடி ஸ்கூட்டரை ஸ்டார்ட் செய்தான்.

ஸ்கூட்டர் மறையும் வரை பார்த்துக்கொண்டு நின்ற ஆறுமுகம் வெளிக் கிளம்பினர். ''எங்கே திடீரென்று?'' என்றாள் அவர் மனைவி.

''நான் ஸ்கூட்டர் சீர் செய்கிறதாய்ச் சொன்னபடி செய்யமாட்டேன் என்று மாப்பிள்ளைக்கு மூக்கிலே வேர்த்திருக்கிறது. மூன்று மாசத்துக்கு முன்னடி என் ஸ்கூட்டரை அவரே எடுத்துக் கொண்டிருக்கிறார். அதில்தான் வந்தார். போலீஸ் ஸ்டேஷனுக்குப் போறேன். என்னுடைய ஸ்கூட்டர் திருட்டுக் கம்ப்ளெயிண்டை உடனே வாபஸ் வாங்கியாகவேண்டும்,'' சொல்லிக் கொண்டே நடந்தார் அவர்.

# டிபன் பாக்ஸ்



''ஸ்கூலுக்கு ஏண்டி வரலே நீ? புரட்டுக் கள்ளி. டிராமாவிலே நடிக்கப் போறியாமே?''

சகுந்தலாவும் அவனும் பத்தாவது வகுப்புப் படித்துக் கொண்டிருந்தார்கள். அவனுக்கு அவள் முறைப் பெண்.

''சொன்னால் நீ வேணும் னேம்னு சொல்லிடுவே. டீச்சர் நான்தான் ஞானசவுந்தரின்னு தீர்மானமாச் சொல்லிட்டாங்க.'' சகுந்தலா பயந்து கொண்டே சொன்னாள்.

''நீ ஒண்ணும் ஆக்டு பண்ண வேண்டியதில்லே. சொல்லிட்டேன்.''

இரண்டு நாளாயிற்று. புழக்கடைக் கிணற்று மேடையில் சகுந்தலா தன்பாட்டுக்கு வசனத்தை ஒத்திகை பார்த்துக் கொண்டிருந்தாள்.

''ஏய்! நான் சொன்னேனில்லே.'' அவள் கையிலிருந்த வசன நோட்டுப் புத்தகத்தைப் பறித்தான். கிழிக்கப் பார்க்கும் போது அவன் அம்மா வந்து விட்டாள். ''அவள் மேலே கை வை சொல்றேன். சூடு போடறேன் பார். மொட்டை அதிகாரமா பண்றே?''

நாடகத்துக்கு முந்திய தினம். பஸ்ஸில் மிகுந்த கூட்டம். பள்ளிப் பெண்கள் நிறையப் பேர் ஏறினார்கள். அவன் முழங்கையில் சுள்ளென்று என்னவோ சுட்டது.

அவனைத் தாண்டிச் சென்ற பெண்ணின் கையிலிருந்த எவர்சில்வர் டிபன் பாக்ஸ்தான் அவன் கையைச் சுட்டது. உள்ளே மிகச் சூடாக டிபன்.

பஸ் ஓடிக் கொண்டிருந்தது. அவனுக்குச் சிறிது தள்ளி சகுந்தலா நின்றிருந்தாள். ஸ்டாண்டிங்காக. யோசித்தான்.

பஸ் ஏதோ ஒரு வளைவில் திரும்பியது. தனக்கு முன்னாலிருந்த டிபன் பாக்ஸ் பெண்ணைப் பிடித்துச் சகுந்தலாவின் மீது ஒரு தள்ளுத் தள்ளினான். தற்செயல் போல்!

அடுத்த கணம் சகுந்தலா 'ஆ', என்று துடித்துப்போனாள். டிபன்பாக்ஸ் பெண்ணின் கையிலிருந்த சூடான எவர் சில்வர் பாக்ஸ் சகுந்தலாவின் வெற்று இடுப்பில் அழுத்தமாகப் பதிந்து நன்றாகச் சூடு போட்டு விட்டது.

ராத்திரி களிம்பு தடவியும் கொப்புளித்துவிட்டது.

அவளை மறுநாள் நடிக்க முடியாதபடி செய்தாகிவிட்டது என்று அவன் நினைத்துச் சந்தோஷப்பட்டான். ஆனால் அது அற்ப சந்தோஷமாகிவிட்டது. மறுநாள் அத்தனை வலியிலும் சகுந்தலா மேடையில் நடித்து விட்டாள்.

பள்ளி விழாவில் நாடகம் நடந்து முடிந்ததும் தலைமை ஆசிரியரைத் தேடி ஒருத்தர் வந்தார். ''தற்செயலாக நாடகம் பார்க்க வந்தேன். ஞான சவுந்திரியாக நடித்த பெண்ணின் முகத்தில் அபாரமான எக்ஸ்பிரஷன். சிற்றன்னையின் கொடுமையால் ஏற்பட்ட வேதனையை நாடக முழுவதும் முகத்தில் காட்டினாள். எங்கள் யூனிட்டில் அடுத்தாற்போல் எடுக்கும் சோகப் படத்தில் நடிக்க மிகவும் பொருத்தமாக இருப்பாள்....''

கிணற்று மேடையில் உலகத்தையே வெறுத்து அமர்ந்திருந்தவனின் காதில் யாரோ விசும்பும் சத்தம்.

சகுந்தலா.

''நான்.... நான்..... சினிமாவிலேயெல்லாம் நடிக்க மாட்டேன்.. அத்தான், நீதான் என்னைக் காப்பாற்றணும்., நான் உன்னுடைவள்.''

மார்பில் வந்து விழுந்தவளை அணைத்துக்கொண்டான். கண்ணில் நீர் வழிந்தது.

ஸோனல்

# நெருப்பு சுடுவதில்லை



அப்போது மத்தியானச் சாப்பாட்டுக்காக அலுவலகத்திலிருந்து நான் வீட்டுக்கு வந்திருந்தேன்.

—''ஐயோ... ஐயோ!'' என்ற பக்கத்து வீட்டு நளினியின் அலறல் எனக்கு உணவு பரிமாறக் குனிந்த சுமதியைச் சட்டென நிமிர்த்தியது.

—''ஐயோ, காப்பாத்துங்க.... காப்பாத்துங்க!''—அலறல் தொடர்ந்தது.

—ஏதோ ஆபத்து! சாப்பாட்டை அப்படியே போட்டுவிட்டு நான் கிளம்ப, சுமதியும் பின்னே ஓடிவர, நாங்கள் அடுத்த வீட்டு வாசலை எட்டுவதற்குள் அண்டை அயலார் கூடியிருந்தனர். கதவு அடைக்கப் பட்டிருந்தது.

—'ஏதாவது முகமூடிக் கொள்ளைக்காரன் உள்ளே புகுந்து கதவை அடைத்துக் கொண்டிருப்பானோ?'—என் மூளை இயன்றவகையில் எல்லாம் யோசனை சொன்னது.

—''ஐயய்யோ.... புடவையில் நெருப்பு பிடிச்சிருச்சே.... காப்பாத்துங்களேன்!''—உள்ளிருந்து மீண்டும் நளினியின் அபயக் குரல்.

தூரத்திலிருந்து ஓடிவந்து கதவில் 'மாதினேன். கதவு திறக்கவில்லை.

—உள்ளே நளினியின் அலறலும் னமாய் ஒலித்தது. ஒருவழியாய் ஓய்ந்து ட்டது!

—சில நிமிடங்களில் உள்ளே ழ்ப்பாள் விலக்கப்படும் சத்தம் கேட்க, வு திறந்தது.

—இடிவிழுந்த மரம்போல சங்கர் ரிருந்தான்.

—''எவ்வளவோ முயற்சி பண்ணி ஸ்டவ்விலிருந்து அவளோட நைலக்ஸ் சேலையில் பிடிச்ச நெருப்பை என்னால் அணைக்கவே முடியலை!'' என்றான். குரல் கரகரப்பாய் உணர்ச்சியின்றி இருந்தது.

—''பின்னே தெருக் கதவையும் கொல்லைக் கதவையும் ஏன் தாழ் போட்டே? திறந்துவிட்டிருந்தா எப்படியாவது முயற்சி பண்ணி நாங்களாவது நெருப்பை அணைச்சிருப்போமில்லையா?''

—''.....''

—அவன் மௌனமாயிருக்க எனக்கு எரிச்சலாய் வந்தது. அவன் சட்டையைப் பிடித்து உலுக்கினேன். —''வீணா ஒரு பெண்ணோட உயிரைப் பலி கொடுத்திட்டியே பாவி! ஏன் கதவைத் திறக்கலே? உன் மனைவிக்கு நெருப்பை வச்சுக் கொலை பண்ணிட்டேன்னு நாங்கள்ளாம் போலீசுக்குப் புகார் பண்ணுவோம்!''

—''நெருப்பிலிருந்து அவளைக் காப்பாற்றப் போராடின நான் அவளை நிர்வாணப் படுத்திவிட்டேன். அப்படியும் அவளைக் காப்பாற்ற முடியலை. அவளுடைய நிர்வாணத் தோற்றம் எனக்கு மட்டும்தான் சொந்தம். அதை நான் மட்டும்தான் பார்க்கலாம். அந்தச் சுயநலம்தான் என்னைக் கதவைத் திறக்கவிடாமல் தடுத்திடுச்சு,'' என்றான்.

—அவன் வார்த்தைகள் என் நெஞ்சைச் சுட்டன.

# குட்மார்னிங் மேடம்

நிவேதா

**கா**லையில்தான் அந்த கான்வெண்ட்டில் புதிதாய் டீச்சர் வேலையில் சேர்ந்தேன்.

வீட்டில் சும்மா இருப்பதைக் காட்டிலும் ஏதாவது வேலையில் சேர்ந்தால் நல்லது என்று தோன்றவே, தெரிந்தவர் ஒருவர் சிபாரிசில் இந்த வேலை கிடைத்தது. தனியார் பள்ளி என்பதால் வெறும் பி. ஏ. மட்டும் போதுமானதாக இருந்தது.

அலுவலகத்தில் ' நுழையும் போதே, அங்கே பணிபுரிந்த கிளார்க் என்னைப் பார்த்ததும் ''குட்மார்னிங் மேடம்!'' என்றாள்.

கிளாசுக்குப் போகிற வழியில் காரிடாரில் நடந்து செல்லும் போது, எதிரில் வந்த, முன்பின் தெரியாத, அறிமுகமே இதுவரை ஆகாத மாணவிகள் எல்லாம் 'குட்மார்னிங் மேடம்' என்றார்கள். எனக்குப் பெருமையாக இருந்தது. எனக்கு ஒரே ஆச்சரியம். முன்பின் தெரியாத எனக்கு குட்மார்னிங் சொல்லுகிறார்களே! ஆங்கிலப் பள்ளிக்கூடம் என்பதால் டிஸிப்பிளின் எல்லா இடங்களிலும் பரவிக் கிடக்கிறது போல இருக்கிறது என்று நினைத்தேன்.

கிளாஸ் ரூம்.

மாணவிகள் எல்லோரும் எழுந்து ஒருமுகமாக 'குட்மார்னிங் மேடம்' என்றார்கள்.

பதிலுக்குச் சொல்லிவிட்டு எல்லோரையும் உட்காரப் பணிந்தேன். முதல் பெஞ்சில் உட்கார்ந்திருந்த ஒரு மாணவியை அழைத்து, என்ன பாடம் நடத்த வேண்டும் என்று கேட்டேன்.

அருகில் வந்த மாணவி மெல்ல ''குட்மார்னிங் மேடம்!'' என்றாள். கேட்ட விவரங்களைச் சொல்லி விட்டு நகர்ந்தாள்.

தெரிந்தவரையில் பாடம் நடத்தினேன்.

அந்த பீரியட் முடிந்தது. அடுத்த பீரியட்கள் வேறு சில கிளாசுகளுக்குப் போய்விட்டு, மறுபடியும் மாலையில், காலையில் முதன் முதலாகப் போன கிளாசுக்குப் போனேன்.

ஒரே அசதியாக இருந்ததால் மாணவிகள் எல்லாரையும் அமைதியாக இருக்கச் சொல்லிவிட்டு, ஒரு



மாணவியைக் கூப்பிட்டு ஒரு புத்தகம் கேட்டேன்.

புத்தகத்தோடு வந்த மாணவி ''குட்மார்னிங் மேடம்'' என்றாள்.

எனக்கு ஒரே அதிர்ச்சி! மதியம் என்ன குட்மார்னிங்? குழப்பமாக இருந்தது. அவளிடம் கேட்டேன்: ''காலையிலதான் குட்மார்னிங் சொன்னீங்களே! திரும்பவும் இப்ப எதுக்கு குட்மார்னிங்?''

''அது வந்து மேடம்...'' இழுத்தாள் அவள்.

''சும்மா சொல்லு'' என்றேன்.

''யாருடைய புடவையாவது கொஞ்சம் மேலே விலகியிருந்தால் அவங்களுக்கு 'குட்மார்னிங் மேடம்' என்று சொல்லி, அதைச் சரி செய்ய மறைமுகமா தெரிவிப்போம். நேரிடையாகச் சொன்னால் எல்லோருக்கும் தெரிந்து அசிங்கமாகப் போயிடும். அதுக்காகத்தான் எங்க ஸ்கூல்லே இப்படி ஒரு வார்த்தையைக் கண்டுபிடிச்சு வைச்சிருக்கோம்'' என்றாள் அவள்.

எனக்கு அசிங்கமாகப் போய் விட்டது. வீட்டிலும், வெளியிலும் சல்வார் கம்மிஸில் இத்தனை நாளும் இருந்துவிட்டு, புடவைக்குத் தாவியதில் அடிக்கடி 'அப்படி'ச் செய்யத் தோணுமல்...

# பெண் எப்படி?





ராமனாதனிடமிருந்து போன் வந்த போது முதலில் சுவாரசியமாக இருந்தது. பிறகு சங்கடமாகிவிட்டது.

''உங்களால் ஒரு காரியம் ஆகணும்,'' என்று பீடிகை போட்டார்.

''சொல்லுங்களேன்,'' என்றேன் சிறிது பயத்தோடு.

''வேறே ஒன்றுமில்லை. என் பெரிய பையன் சேகருக்கு நல்ல பெண்ணாகப் பார்த்துக் கல்யாணம் பண்ணி வைக்க வேண்டும். பேப்பரில் விளம்பரம் கொடுத்திருந்தேன். நிறைய வந்திருக்கிறது. அதில் ஒன்று உங்கள் ஆபீஸ் டெஸ்பாட்ச் செக்ஷனில் வேலை செய்கிறாளாம். சாரதா என்று பெயர்....''

''சரி?''

''அந்தப் பெண் மோதி இஞ்சினியரிங் லிமிடெட்டில் வேலை பார்ப்பதாக எழுதியிருப்பதைப் பார்த்ததும் உங்கள் ஞாபகம் வந்தது. நீங்கள் என்ன பண்ணுகிறீர்கள், அந்தப் பெண் எப்படி என்ன என்று கொஞ்சம் நைசாய் விசாரித்துச் சொல்ல வேண்டும். நேருக்கு நேர் பார்த்துவிட்டு, பிறகு பெண் பிடிக்கவில்லை என்று சொல்வது அநாகரிகம். அது என் பையனுக்கும் பிடிக்கவில்லை. என்ன, முடியுமா?''

''ஓ, அதுக்கென்ன? பார்த்துப் போன் செய்கிறேன்,'' என்று சொல்லி அவருடைய போன் நம்பரைக் குறித்துக் கொண்டேன்.

எங்கள் நிறுவனம் பெரிய சமுத்திரம். நாலு மாடிகளில் ஐம்பது பிரிவுகள் இருக்கின்றன. எந்தப் பிரிவில் யார் வேலை செய்கிறார்கள் என்பதைக் கண்டு பிடிப்பதே கஷ்டம். டெஸ்பாட்ச் பிரிவில் ஒருவரைத் தெரிந்து வைத்துக் கொண்டு, அவரிடம் ஏதோ வேலை இருப்பது போல் சென்று, விசாரித்தேன்.

பாப்பா ரகு

''அதோ அந்த எட்டாவது மேஜை. பெங்கால் காட்டன் சிவப்புப் புடவை. தலைக்கு மல்லிகைப் பூ வைத்துக் கொண்டிருக்கிறது பாருங்கள்,'' என்று அந்த நண்பர் சொன்னார்.

பெண் துளிகூட அழகாயில்லை. நிறமும் மட்டு.

''ரொம்ப நன்றி,'' என்று சொல்லிவிட்டுத் திரும்பிவிட்டேன்.

ராமனாதனுக்குப் போன் செய்யவில்லை. என் வாயால் அதைச் சொல்லி ஒரு பெண்ணின் எதிர்காலத்தைக் கெடுப்பானேன்? அந்த பாவத்தைச் சம்பாதித்துக் கொள்வானேன்?

ஒரு வாரம் பேசாமலிருந்தேன். ஆனால் அடுத்த வாரம் ராமனாதன் நேரிலேயே வந்து விட்டார்.

''என்ன சார், விசாரித்தீர்களா?'' என்று கேட்டார்.

''வந்து.... அந்த டிபார்ட்மெண்ட்டுக்கு அழைத்துப் போகிறேன். நீங்களே ஒரு முடிவுக்கு வாருங்கள்,'' என்று கூறி அழைத்துப் போய், முன்பு எனக்கு நண்பர் அடையாளம் காட்டிய மாதிரியே நானும் அவருக்குச் சாடையாய்க் காட்டினேன்.

பிறகு வெளியே வந்தோம். ''சுப்பிரமணியம்.... ரொம்ப சந்தோஷம்.... இந்தப் பெண்ணையே முடித்து விடலாம்,'' என்று என் கையைக் குலுக்கினார்.

''பெண்ணை.... உங்களுக்கு..... உங்கள்.... பையனுக்கு.....'' என்று திகைத்தேன்.

''சேகர் பெரும்பாலும் வெளியூரில் தங்கிப் படித்துக் கொண்டிருந்ததால் நீங்கள் அவனை பார்த்திருக்க மாட்டீர்கள்....''

''ஆமாம்.''

''அவன் பார்க்கிறதுக்கும் சுமார். நிறமும் சுமார். அழகான பெண்ணாக இருந்தால், கர்வம் தலைக்கேறித் தன் வாழ்க்கையைக் கெடுத்துவிடும் என்று பயப்படுகிறான். சுமாரான பெண்தான் வேண்டுமாம்....''




# டயரி!

வேலை கிடைக்காமல் அலைந்து திரிந்த ஏமாற்றத்துடன் திரும்பி வந்துகொண்டிருந்தபோது தீபாவுக்குத் தெருவிலே ஒரு டயரி கிடைத்தது.

ரத்னா அண்டு கோ ஏற்றுமதி இறக்குமதி கம்பெனி உரிமையாளர் தியாகராஜனின் டயரி அது. அவருடைய சொந்த விருப்பு வெறுப்புக்களை எல்லாம் அதிலிருந்து ஊகிக்க முடிந்தது.

ஒரு குறிப்பு: 'பியூன் பால்ராஜ் ஆபீஸ் பெருக்க வரும் லச்சியுடன் ஆபீசுக்குள்ளேயே காதல் விவகாரம் நடத்துவதாய்ப் புகார் வந்தது. எனக்கு அவன் மேல் பொறாமையாய் இருந்தது. வெளியில் சொன்னால் வெட்கக்கேடு.'

தீபா புன்னகை செய்து கொண்டாள்.

ரத்னா அண்டு கோவில் ஸ்டெனோ பேட்டிக்காகக் காத்திருந்தவர்கள் தீபாவைப் பார்த்து நடுவில் ஒரு லச்சி வந்து உட்கார்ந்து விட்டாளே என்று முகம் சுளித்தார்கள். அவளுடைய முறை வந்தபோது மாற்றிப் போட்ட மாராப்பைச் சரி செய்துகொண்டு எழுந்து போனாள். பைலைப் புரட்டிக்கொண்டிருந்த தியாகராஜன் நிமிர்ந்து பார்த்தார். அவர் விழிகளில் விளக்கு எரிந்தது.

அவளுக்கு வேலை கிடைத்து விட்டது.

சாப்பாட்டு இடைவேளை நேரம்.

'தெரியாத்தனமாய்ச் சைவம் என்று சொன்னாலும் சொன்னேன், தினமும் கத்திரிக்காய் வெண்டைக்காய் என்று குரங்கு சாப்பாடாய்ப் போயிற்று,' என்று அலுத்துக்கொண்டே காரியரைத் திறந்தவர் அசந்து போனார்.

மணக்க மணக்க மசாலா வாசனையில் அவருக்குப் பிடித்தமான தந்தூரி சிக்கன்! இதை யார் கொண்டு வந்து வைத்தார்கள் என்று சுற்று முற்றும் பார்த்தார். புன்னகைத்தவாறு நெருங்கி வந்த தீபா, ''நான் எடுத்துப் பரிமாறவா?'' என்று கேட்டாள்.

அன்றிலிருந்து தீபா கையால் தான் அவருக்குச் சாப்பாடு.

அவருடைய டயரியில் விநோதமான சூப் தயாரிக்கும் முறை ஒன்று இருந்தது. தேவையான பொருட்கள் ஏதோ மூலிகைகள் போல் இருந்தன. வெயிலில் அலைந்து நாட்டு மருந்து கடைகளில் சிரமப்பட்டுச் சேகரித்தாள். குறிப்பிட்டிருந்த முறைப்படி சூப் தயாரித்தாள்.

''இந்த சூப் உங்களுக்குப் பிடிக்கும். ஒரு வித்தியாசமாய் முதலில் சூப் சாப்பிடுங்கள்,'' என்று குழைந்தாள்.

வாயருகே கொண்டு போன தியாகராஜன் சற்று நிதானித்தார். ''ஒரு வித்தியாசத்துக்கு, இன்றைக்கு முதலில் என் கையால் உனக்கு ஊட்டி விடுகிறேன்,'' என்று அவளை அணைத்துத் தன் மீது சாய்த்துக் கொண்டார். ஊட்டி விட்டார்.

திடுதிப்பென்று வயிற்றில் நெஞ்சில் தீப்பற்றி எரிவது போலிருந்தது தீபாவுக்கு. விழிகள் செருகச் சாய்ந்து விட்டாள்.

சூப்பை முகர்ந்த போதே தியாகராஜன் அதைப் பற்றித் தெரிந்து கொண்டு விட்டார். அவருடைய கூட்டாளியைக் கொலை செய்ய அவர் முன்பு தயாரித்த விஷக் கலவை அ ற்றே அது!

எஸ். ராஷ்மி

# மேக்கப்



பார்ட்டி. அசோகா புல் தரையில் நிறைய முளைத்திருந்தன வெள்ளை மேஜைகள். விளக்குத் தோரணங்கள். எந்தப் பார்ட்டியாயிருந்தாலும் 'நைஸ் வரலட்சுமி'யைப் பார்க்கலாம்.

நைஸ் என்பது அவளாக உண்டாக்கிய ஒரு சமூக சேவை ஸ்தாபனம். N.I.C.E. பழக, சிரிக்க, பெருமை பரப்ப, பொழுதைக் கழிக்க சந்தர்ப்பங்கள் வேண்டியிருந்தன.

''மிஸ் வரலட்சுமி, உங்களுக்கு ட்வென்ட்டி ஃபைவ் முடிந்து விட்டதா?'' ஒரு மாக்னெட் கேட்டது.

அவளுடைய தலையின் கர்வப் பகுதி மகிழ்ந்து பொய் சொல்லும் இலாகாவுக்கு உத்தரவிட்டது. ''ஓ! ஐ'ம் ட்வென்டி சிக்ஸ்!''

பொய்யின் நிறம் பச்சை. மிஸ் வரலட்சுமியின் அசல் அரை செஞ்சுரியைத் தாண்டிவிட்டது எப்போதோ, ஆனால் அவளுடைய மடிப்பு விழாத இடுப்பின் மெல்லிசும், மேக்கப்பும் சத்தியம் செய்யும் இருபத்தைந்தைத்தான் என்று.

ஆமைக்குக் கூடு. மிஸ் வரலட்சுமிக்கு மேக்கப். மேக்கப் இல்லாமல் அவள் தன் முகத்தைப் பார்த்துக் கொண்டதே இல்லை. அதற்கென்று வீட்டில் ஒரு தேவியைப் பிடித்து வைத்திருந்தாள்.

தேவி அவளுடைய உறவுகாரப் பெண். கதியற்ற ஏழை. சாப்பாடு துணி மட்டும் பெற்றுக் கொண்டு எந்த வேலைக்காரி உழைக்க முன் வருகிறாள் இந்தக் காலத்தில்? அப்படியே வந்தாலும் வரலட்சுமியின் முன்கோப அறைகளை முகத்தில் தாங்கிக் கொள்வாளா இவள் போல?

தேவியின் முக்கிய வேலை மேக்கப். காலையில் வரலட்சுமி தூங்கிக் கொண்டிருக்கும் போதே அவள் உடம்புக்கு மேக்கப் செய்துவிட வேண்டும். மேக்கப் கலையாமல் அவள் பல் தேய்க்கும் போது அவள் கொப்புளிக்கும் தண்ணீரைக் கிண்ணத்தில் ஏந்தி ஜாக்கிரதையாகப் பிடித்துக் கொட்ட வேண்டும். பத்து மணிக்கு வெளியே கிளம்பும் போது ஒரு டச்சப். ஒரு மணிக்கு வந்ததும் மறுபடி ஒரு டச்சப்.

மத்தியான ஓய்வின் போது மேக்கப். நாலு மணிக்கு டச்சப். சாயந்தரம் விசேஷ மேக்கப். இரவு படுக்கு முன் டச்சப். மறுபடி காலையில் எழுமுன் மேக்கப்.

தன் அசல் முகத்தைப் பார்த்துக் கொள்ள வரலட்சுமிக்குச் சந்தர்ப்பமே கிடைத்ததில்லை. அம்மை வடுக்கள் அவளுக்கு இருந்தது என்பது அவளுக்கு மறந்து கூடப் போயிற்று.

பார்ட்டி முடிந்து பங்களா திரும்பிய பணக்காரிக்குக் கதவைத் திறந்து விடச் சிறிது தாமதமாகிவிட்டது தேவிக்கு. ''என்னடி மூதேவி அவ்வளவு தூக்கம்?''

''நானும் மனுஷிதானேம்மா?''

வரலட்சுமியை இந்த இரண்டு வார்த்தைகள் மிருகமாக்க, மின்சார வேகத்தில் கை கன்னத்தை நோக்கி இயங்க, அவளது கூரான பாலிஷ் நகம் தேவியின் கண்ணில் அழுத்திப் பாய, சிறிது ரத்தத்துடன் கண் குருடான வலியுடன் தேவி துடித்து விழுந்தாள்.

அந்த வேதனையினால் எழ முடியாத சூழ்நிலை. காலையில் எஜமானிக்குச் செய்துவிட வேண்டிய மேக்கப்பை அவள் செய்யவில்லை.

வரலட்சுமி வழக்கம் போல காலையில் எழுந்தாள். பல் தேய்த்துவிட தேவிக்கு ஒரு அதட்டுக் குரல் தந்தாள். வாஷ் பேஸினுக்குச் சென்றாள்.

அங்கிருந்த கண்ணாடியில் ஒரு கோரமான கிழட்டு முகம் தெரிந்தது. அம்மை வடுக்கள் நிறைந்து தோல் சுருங்கி—

ஆ! இது யார்.... ஐயோ நானா!

மறுநாள் பத்திரிகையில் செய்தி: சமூக சேவகி மிஸ் வரலட்சுமி மாரடைப்பால் மரணம்.

**எஸ். விஜய்**



# எதிரி

'தணிகை'

அலுவலக ஆண்டு விழாவில் மாஜிக் ஷோ குறிப்பிடத்தக்க அம்சமாய் இருந்தது.

புரொபசர் தினேஷ் பார்வையாளர்களைக் கூட்டுச் சேர்த்துக் கொண்டு கலகலப்பூட்டிக் கொண்டிருந்தார்கள்.

''இப்பத்தான் கொஞ்ச நாளாய் பிரபலமாகிக் கொண்டு வருகிறான் இவன். இது பொறுக்கவில்லை நம் அக்கௌண்டண்ட் சௌந்தருக்கு.'' தாழ்ந்த குரலில் சொன்னான் கேதாரி.

''அப்படியா? சௌந்தருக்கும் இந்த ஆளுக்கும் என்ன சம்பந்தம்?'' சுவாரஸ்யம் தட்டியது அப்துல்லாவுக்கு.

''புரொபசர் தினேஷின் அந்த ஆட்டுத் தாடி மீசை, புருவ மேக்அப்பை மனசுக்குள் கலைத்துவிட்டுக் கவனி. உனக்கும் தெரிந்த ஆள்தான்.''

அப்துல்லா கற்பனை செய்து பார்த்தான். ''அட, நம்ம தியாகு இல்லை? பாவி இவனா புரொபஸர் தினேஷ்?''

''அதேதான். அக்கௌண்டண்ட் சௌந்தருக்கும் இவனுக்கும் ஆரம்பத்திலிருந்தே ஆகாது. அக்கௌண்டட்டுக்குச் செல்வாக்கு அதிகம். தியாகு மேல் இல்லாததும் பொல்லாததும் சொல்லி டிஸ்மிஸல் ஆர்டர் வாங்கி அனுப்பிவிட்டான். தியாகு தினேஷ் ஆகி ஏதோ கற்றுக் கொண்டு வித்தையை வைத்து மாஜிக் ஷோ நடத்திப் பிழைக்கிறான். பாரேன். இப்போது வேண்டுமென்றே தியாகுவை அடையாளம் தெரியாத மாதிரி மாஜிக் ஷோவுக்கு அவனை ஏற்பாடு செய்திருக்கிறான் சௌந்தர்.''

மேடையில் புரொபஸர் தினேஷ் வெற்றுக் கைக்குட்டையை உதறிக் காட்டி, மூடித் திறந்து உள்ளேயிருந்து ஒரு காகிதப் பூவை நீளமாய் இலையோடு எடுத்துக் காட்டினான். அதைக் கூட்டத்தில் ஒருவரிடம் கொடுத்தான். இதே மாதிரி கைக்குட்டைக்குள்ளிருந்து அடுத்தடுத்துப் பல பூக்கள் பலர் கைக்குப் போயின. ஒன்று அக்கௌண்டண்ட் சௌந்தரின் கைக்கும் வந்தது.

''உங்களுக்கு இஷ்டமான வாசனையை மனத்தில் நினைத்துக் கொண்டு அந்தப் பூவை முகர்ந்து பாருங்கள்!'' என்றான் தினேஷ். அதே வாசனை அந்தப் பூவிலிருந்து வந்தது போலும். முகம் மலர்ந்தார்கள்.

கடைசியாய் வானிஷிங் ட்ரிக். அவன் மேடையில் அமர, ஒரு பெரிய கூடையை அவன் மேல் கவிழ்த்தான் உதவியாளன். பிறகு நீளமான கத்தி ஒன்றினால் கூடையின் இடுக்குகள் வழியே சரக் சரக்கென்று செருகினான்.

அப்போதுதான் அந்த விபரீதம் நிகழ்ந்தது. அக்கௌண்டண்ட் சௌந்தர் எழுந்து மேடைக்கு வந்தான். ''கத்தியை இப்படிக் கொடு. நான் செருகிப் பார்க்க வேண்டும்,'' என்று அவனிடமிருந்து பிடுங்கிக் கொண்டான்.

உதவியாளர் அதிர்ந்து, கையைப் பிசைந்து கொண்டு நின்றான். சௌந்தர் வெறி பிடித்தாற் போல் கத்தியைக் கூடை இடுக்கில் வேக வேகமாய்ச் செருகினான். ரத்தம் பிரிட்டது. ஒரே கலவரம்!

''சொல்லவில்லை? சௌந்தர் பழி வாங்கிவிட்டான்,'' என்று அப்துல்லாவிடம் சொன்னான் கேதாரி.

அதே சமயம் சௌந்தர் அங்கேயே சரிந்து விழுந்தான். மூச்சுப் பேச்சில்லை. டாக்டர் வந்து உயிர் போய்ப் பத்து நிமிடம் ஆயிற்று என்று சொன்னார்.

புரொபசர் தினேஷ் என்ற தியாகு எதிரியைப் பழி தீர்த்துக் கொண்ட வெற்றியில் சிரித்துக் கொண்டான். சௌந்தர் முகர்ந்த காகிதப் பூவுக்குள் அவன் வைத்த விஷ(ய)த்தை யாராலும் கண்டுபிடிக்க முடியவில்லை.

# வேலை



''அடடே, மாப்பிள்ளையா! வாருங்கள் வாருங்கள். உட்காருங்கள். என்ன சாப்பிடுகிறீர்கள்?'' நாகலிங்கம் சாய்வு நாற்காலியில் இருந்தபடி, மருமகன் பட்டாபியை ஒரு போலி உற்சாகம் காட்டி வரவேற்றார்.

பட்டாபியின் முகம் இறுகியது. ''அருணாவைக் கொஞ்சம் கூப்பிடுகிறீர்களா?''

''ஓ, நீங்கள் வாங்கிய முதல் மாசச் சம்பளத்தை உங்கள் சம்சாரத்தின் கையில்தான் கொடுப்பீர்களாக்கும்?''

''மாமா, இந்தக் கிண்டல் எல்லாம் இங்கே வேண்டாம். நான் வேலை பார்க்கிறேனோ நாசமாய்ப் போகிறேனோ, என் பெண்டாட்டியைக் காப்பாற்றிக் கொள்ள எனக்குத் தெரியும். அவளை என்னுடன் அனுப்புங்கள்.''

''இதோ பாருங்கள். என்றைக்கு நீங்கள் ஒரு வேலை தேடிக் கொண்டு ஒழுங்காய்ச் சம்பாதிக்கிறீர்களோ, அன்றைக்கு என் பெண்ணை உங்களுடன் அனுப்பி வைக்கிறேன். அதுவரை நீங்கள் என்ன தான் கஜகர்ணம் கோகர்ணம் போட்டாலும் சரி, அவளை உங்களுடன் அனுப்புவதாய் இல்லை.''

''அதையும் இன்றைக்குப் பார்த்துவிடுவது என்றுதான் வந்திருக்கிறேன். என்றைக்கு நான் அருணாவின் கழுத்தில் தாலி கட்டினேனோ, அப்புறம் உங்களுக்கும் அவளுக்கும் என்னய்யா சம்பந்தம்?''

''இந்தக் கேள்வியை உன் கல்யாணத்துக்குச் சாட்சியாய் நின்றார்களே, அந்த நாலு பேரைக் கேட்டுப் பார். அவள் என் மகள் என்ற பந்தம் என்றைக்குமே அற்றுப் போகாது. நாளைக்கு அவளுக்கு ஒரு நல்லது கெட்டது ஏற்பட்டால் அந்த நாலு பேர் என்னைத்தான் கேள்வி கேட்பார்கள். இன்றைக்கும் கேட்கிறார்கள்—ஒரு வேலையில் நிலைக்காமல் ஒரு வேலை வெட்டி தேடிக் கொள்ளாமல் உங்கள் மருமகப் பிள்ளை சோம்பேறியாய்....''

''இதோ பார். சோம்பேறி கிம் பேறி என்றால் அப்புறம் நடக்கிறதே வேறே. ஆமாம்.''

''என்னடா மிரட்டுகிறாய்? என்ன பண்ணிவிடுவாய்?''

அதுவரை மறைவிலிருந்து கேட்டுக் கொண்டிருந்த அருணா, ''அப்பா.... அப்பா...'' என்று ரகசியமாய் எச்சரித்தாள்.

''நானும் ஆறு தடவைக்கு மேல் வந்து கேட்டுவிட்டேன். இது உனக்குக் கடைசி எச்சரிக்கை. மரியாதையாய் அருணாவை என்னுடன் அனுப்பிவிடு.''

''நல்ல மாட்டுக்கு ஒரு சூடு. இப்போ உன் கணக்குப்படியே ஏழாவது தடவையாகச் சூடு போடறேன். நீ மனுஷனா இருந்தா ஒரு வேலை தேடிக் கொண்டு பெண்டாட்டியைக் கூட்டிப் போக இந்த வீட்டு வாசற் படியை மிதி.''

''இதோ பார், உன்னைக் கடைசியாய் எச்சரிக்கிறேன். மரியாதையாக அருணாவை என்னோடு அனுப்பிவிடு.'' அடித் தொண்டையில் உறுமியவாறு பிச்சுவாவை எடுத்தான் அவன்.

''அடேய், நீ கத்தியைக் காட்டினாலும் சரி, குத்தியே போட்டாலும் சரி, நீ ஒரு வேலை தேடிக் கொள்ளாத வரை உன் மனைவியோடு உன்னால் வாழ முடியாதுடா.'' அவரும் ஆவேசத்தோடு சொல்லி முடித்—

பட்டாபி இப்போது வேலை தேடிக் கொண்டான். இருந்தும் அவனால் மனைவியுடன் வாழ முடியவில்லை. அவன் தேடிக் கொண்ட வேலை: கல்லுடைப்பது—ஜெயிலில்.

'பி.எஸ்.எஸ்.'

# ஒரு புலி ஒரு சிங்கம்

சோ தி ட சிங்கம் அனந்தனுக்கும்
சோதிடப் புலி மணவாளனுக்கும்
போட்டிதான். கிழக்குத் எப்போதும்
யிருந்தார். மேற்குத் தெருவில் அனந்தன் குடி
தெருவில் மணவாளன்.

அனந்தன் பூஜையை முடித்துவிட்டுக் காலை
ஏழு மணிக்குச் சோதிடம் பார்க்க ஆரம்பிப்பார்.
பன்னிரண்டு வரை பார்ப்பார். பிற்பகலானால் லட்ச
ரூபாய் கொடுத்தால்கூட கதவைத் திறக்க
மாட்டார்.

மேற்குத் தெரு மணவாளன் நேர் எதிர்.
அவர் காலை வேளைகளில் பார்க்கவே மாட்டார்.
பிற்பகல் மூன்று மணியிலிருந்துதான் பார்ப்பார்.
இரவு எட்டு வரை பார்ப்பார்.

இரண்டு பேருடைய காரியாலயமும்
ஜேஜே என்றிருக்கும். ஜாதகக் கணிப்புக்கு உதவி
செய்யக் குமாஸ்தாக்கள் என்ன,
கால்குலேட்டர்களென்ன அமர்க்களம்தான்.

இரண்டு பேரும் இரண்டு துருவங்களாக
இருக்கிறார்களே என்று பெண்ணைப் பெற்றவர்கள்
கவலைப்பட்டார்கள்.

அந்த ஊர் போலீஸ் ஸ்டேஷனுக்கு இன்ஸ்
பெக்டர் அருண் என்பவர் மாற்றலாகி வந்தார்.
அவருக்குக் கல்யாண வயதில் மாலினி என்ற பெண்
இருந்தாள். பி.காம். படித்து முடித்த அழகான
குடும்பப்பாங்கான பெண். தெரிந்த இடங்களில்
சொல்லி வைத்திருந்தார். நல்ல இடமாக ஒன்று வந்
தது.

''எதற்கும் ஜாதகங்களை ஒப்பிட்டுப்
பார்த்துவிட்டால் பரவாயில்லையே,'' என்றாள்
இன்ஸ்பெக்டரின் மனைவி.

அனந்தன் அவரைப் பார்த்ததும்,
"அடடே! நீங்கள் கடலூரர் இல்லையா? உங்கள்
வீட்டில் குடியிருந்தோமே நாங்கள்,'' என்றார்.

''அடடா! நந்துவா நீங்கள்?''

''ஆமாம். நந்து என்பது சின்னப் பையன்
பெயர் மாதிரி இருக்கிறது என்று அனந்தன் ஆகி
விட்டேன்,'' என்று சிரித்தார் சோதிடர் ஜாதகத்தை
ஒப்பிட்டார். ''பிரமாதமான பொருத்தம்,''
என்றார்.

இன்ஸ்பெக்டர் நன்றி
சொல்லி எழுந்து கொண்டவர்,
''அனந்து, இதை நான்
சாயந்தரம் மேற்குத் தெரு
மணவாள ஜோதிடரிடமும்
காட்டப் போகிறேன். அப்படித்
தான் என் மனைவியின்
கட்டளை...... நீங்கள் இரண்டு
பேருமே பொருந்தியிருக்கிற
தென்று சொன்னால்தான் என்
மனைவி ஒப்புக் கொள்வாளாம்.''

அனந்தன் சிரித்தார். ''நீங்க
மேற்குத் தெரு மணவாளனிடம்



போக வேண்டிய அவசியமே
இல்லை.''

''ஏன்?''

''அவரும் நானும் ஒரே
ஆசாமிதான். காலையில் இங்கே.
சாயந்தரம் தாடி மீசையுடன்
அங்கே. பல ஊர்களில் ஒரு
ஆளாக இருந்து சோதிடம்
சொல்லிப் பார்த்தேன். ஜனங்
களுக்கு சுவாரசியப்படவில்லை.
எவ்வளவு கெட்டிக்காரத்தன
மாக, துல்லியமாக கணித்துச்
சொன்னாலும், இன்னொரு
சோதிடர் கிட்டே
போய் ஒப்பிடாமல் இருப்ப
தில்லை. இது மனித சுபாவம்.
அதனாலே இந்த ஊருக்கு வந்த
தும் நானே இரண்டு
சோதிடராக ஆகிவிட்டேன்!''

'யோகேஷ்'






பதினேழாவது முறையாகத் தன்னுடைய ஹாண்ட் பாக்கில் கையை விட்டுக் குடைந்தாள் சாவித்திரி. ஹாண்ட் பேகை மேஜை மீது கவிழ்த்தாள். ஊகூம்.

அந்தச் சாவியை மட்டும் காண வில்லை.

நகரத்தின் எல்லையில் அமைந் திருந்த அந்த வங்கிக் கிளையின் மானேஜர் அன்றைக்கு விடுமுறையில் இருந்தார். சீனியர் அக்கௌண்டண்ட் என்ற முறை யில் சாவித்திரிதான் இன்றைக்கு அந்தக் கிளையின் நிர்வாகப் பொறுப்பை ஏற்றிருந் தாள். அதற்காக நேற்று அலுவலக நேரம் முடிவதுடன் வங்கியின் பாதுகாப்பு அறை யின் சாவியைச் சாவித்திரியிடம் மானேஜர் ஒப்படைத்திருந்தார்.

அந்தச் சாவியைத்தான் காணோம்!

முகம் வியர்த்து வழியத் துவங் கியது.

'இனி என்ன பண்ணுவது? டைம் வேறே ஒன்பது ஐம்பத்தஞ்சு ஆச்சே. கஸ்டமர்ஸ் எல்லாம் வரத் தொடங்கிடு வாங்களே!'

இன்னிக்கு பாங்க் என்னோட கன்ட்ரோல்லதான் இருக்குமுனு நேரத்தைக்கெல்லாம் வீட்டிலே பீத்திக் கிட்டு இருந்தேன். அந்தக் குரங்கு கேசவன் கூடச் சொன்னான், 'உன்னை நம்பி உங்க பாங்க்கை ஒப்படைச்சாங்களே..... உருப்பட்ட மாதிரிதான்...' என்று.

அவன் சொன்னது சரியாத்தான் போச்சு.

அக்கௌண்டண்ட் சிவராம கிருஷ்ணன் இருக்காரே.... அப்பப்பா! அந்த ஆளுக்கு இந்த விஷயம் தெரிஞ்சா சர்க்கரைப் பொங்கல்தான். ஏற்கனவே, இன்னிக்கு நான் பிராஞ்ச் சார்ஜ் எடுக்கற திலே அவருக்குப் பொறாமை.....

முகமெல்லாம் வியர்வை ஓடை யாய் ஓடிக் கொண்டிருந்தது.

கேஷியர் ராமச்சந்திரன் புன்னகை தவழ வந்தார். ''என்ன, சாவித்திரியம்மா சேஃப் ரூமைத் திறக்கலாம்......'' என்று வாயெடுத்தவர், ''அச்சச்சோ! என்ன ஆச்சு உங்களுக்கு? முகம் பேயறைந்தாற் போல் இருக்கிறதே. ரொம்பவும் வியர்த்து ஊத்துது?'' என்றார்.

''சா.... சாவி சேஃப் ரூம் சாவி... காணோம்...''

''ஐயையோ! மணி பத்து ஆகுதே! கஸ்டமர்ஸ் எல்லாம் நிறைந்து விட்டார்கள். டூப்ளிகேட் கீ கூட மெயின் பிராஞ்ச் லாக்கரில்தான் வைத்திருக்கி றோம். எடுத்துவர நேரமில்லையே..... சற்று நிதானமா பதட்டப்படாமே யோசிச்சுப் பாருங்க. முதலில் முகத்திலே இருக்கிற வியர்வையைத் துடையுங்க.''

அவள் தன் கைக்குட்டையை எடுத்தாள். அது ஏற்கனவே ஓட்ட நனைந்து அழுது வடிந்து கொண்டிருந்தது. பின், தன்னுடைய இடுப்பில் செருகியிருந்த புடவை முந்தானையை, வேர்வையைத் துடைப்பதற்காக, வேகமாக இழுத்தாள். படீரென்று நெற்றியில் ஓர் அடி! நெற்றியைப் பிடித்துக் கொண்டே முந்தானையைப் பார்த்தாள்.

சாவி!

''ஹி..... ஹி.....! வேறே எங் காவது வைத்தால் மறந்து போயிடும், தொலைத்து விடுவேன் என்று பயந்து, சாவியைப் புடவையின் முந்தானை நுனியில் முடிச்சுப் போட்டு இடுப்பில் செருகி யிருந்தேன்!''

இப்பொழுது சாவித்திரியின் முகத்தில் வேர்வை வழியவில்லை. வேறு என்னவோ வழிந்தது.



''இந்தத் தாமு அவன் பீரோவை வைத்திருக்கும் லட்சணத்தைப் பாரேன்,'' என்று சுமதி தன் அக்கா யமுனா விடம் சொன்னது தப்பாய்ப் போயிற்று.

பீரோவையே தலைகீழாய்ப் புரட்டியெடுத்து ஒழுங்கு பண்ணுவதாய் அதையும் இதையும் கலைத்துப் போட ஆரம்பித்து விட்டாள் யமுனா.

காதலித்துக் கல்யாணம் பண்ணிக் கொண்டவள் யமுனா. இப்போது தான் முதன்முதலாகப் பிறந்த வீடு வந்திருக்கிறாள். வந்ததிலிருந்தே அவள் சரியாய் இல்லை. காரணமில்லாத கோபம், காரணமில்லாத எரிச்சல்—சுமதி கவனித்துக் கொண்டுதான் வந்தாள்.

பாவம், யமுனாவின் நிலைபற்றி அவளுக்கு என்ன தெரியும்? தன் கணவனைத் திருப்திப் படுத்துவதற்காகத் தெரியாத்தனமாய் அவள் ஒரு பொய்யைச் சொல்லி வைக்க, அதுவே விபரீதமாய்ப் போய்விட்டது. இப்போது அவள் அந்தப் பொய்யை நிஜமாக்கியாக வேண்டும். இல்லாவிட்டால் அவர்கள் தாம்பத்திய வாழ்வே ஆட்டம் கண்டுவிடும் போலிருக்கிறது.

யமுனா பீரோவின் கீழ்ப் பகுதியை உதறிப் பிரித்துப் போட்டாள். அந்தக் குப்பைக்குள் என்ன மாயம் இருந்ததோ தெரியவில்லை. திடுதிப்பென்று அவளுடைய செய்கையில் ஒரு மென்மை ஏற்பட்டதைக் கவனிக்கத் தவறவில்லை சுமதி.

வேண்டுமென்றே, ''கடா மாடு மாதிரி வளர்ந்துவிட்டானே தவிர, இந்தத் தாமுவுக்குக் கொஞ்சமாவது பொறுப்பு இருக்கிறதா பாரக்கா. கடைக்குப் போய் வாடாமல் வதங்காமல் ஒரு காய்கறி வாங்கி வரத் தெரிகிறதா? தண்ட பிண்டம்,'' என்று திட்டினாள், அக்காவை ஆழம் பார்ப்பதற்காக.

''உக்கும்! நீ வீட்டிலே உட்கார்ந்து கொட்டிக் கொள். உன்னைவிட அவன் ஒன்றும் தண்டம் இல்லை. ஏன், காய்கறிக் கடை பக்கத்தில்தானே இருக்கிறது? என்ன வேணுமோ அதை நீ போய் வாங்கி வந்தால் தேய்ந்தா போய் விடுவாய்?''

''பாரேன் பின்னே? இப்படி

[redacted]

பீரோவைக் குப்பையாய் வைத்திருக்கிறான்!''

''ஆமாம், நீ படிக்கிறபோது இருந்த லட்சணம் எனக்குத் தெரியாதாக்கும்? அப்போ உனக்காக நான் அடுக்கி வைத்தேன். இப்போது அவனுக்காக நீ அடுக்கி வைக்கிறாய். ஒன்றும் குறைந்து போகமாட்டாய். செய்.'' வெடுக்கென்று உத்தரவிட்டுவிட்டு எதையோ மறைத்துக் கொண்டு அக்கா எழுந்து சென்றதைக் கண்டு மோவாயில் கை வைத்து ஆச்சரியமாய்ப் பார்த்தாள் சுமதி.

அக்காவுக்குத் திடீரென்று தாமு மேல் அநியாயக் கரிசனம் ஏற்பட்டதற்குக் காரணம் அவளுக்கு எப்படித் தெரியும்?

காதல் கணவன் தன் ஆசையையெல்லாம் கொட்டி ஆரம்பத்தில் கவிதையாய் ஒரு கடிதம் எழுதியிருந்தான் யமுனாவுக்கு. அதைப் பற்றி அவன் கேட்டபோது, 'அதைப் பொக்கிஷமாய்ப் பாதுகாத்து வைத்திருக்கிறேனாக்கும்,' என்று அப்போதைக்குச் சொல்லிச் சமாளித்தாள். உண்மையில் அதை எங்கே வைத்தோம் என்று அவளுக்கு நினைவில்லை. ஆனால் கணவனோ விடுவதாய் இல்லை. நாளுக்கு நாள் அவன் வற்புறுத்தல் அதிகமாயிற்று. அந்தக் கடிதத்தை எடுத்துக் கொண்டு தான் திரும்ப வேண்டும் என்று சொல்லாமல் சொல்லித் தாய் வீட்டுக்கு அனுப்பி வைத்திருந்தான்.

அந்தக் கடிதம் இப்போது தாமுவின் குப்பைக்குள்ளிருந்து கிடைத்து விட்டதே! தம்பியிடம் அவளுக்கு அன்பு பீரிட இதற்கு மேல் வேறு காரணம் தேவைதானா?

# வைராக்கியம்

சேகருக்கு மனம் நிறைந்திருந்தது. எல்லோரையும் போல் அவன் வாழப் போவதில்லை. அவன் மேலானவனுவான். அவன் மாதத்துக்கு இரண்டு நாள் உண்ணுவிரதம் இருக்கத் தீர்மானித்து அந்த விரதத்தை இன்று ஆரம்பித்து விட்டான். பசியை வென்று விட்டதாய் நினைக்கும்போதே அவனுக்குச் சந்தோஷமாய் இருந்தது.

''சேகர், நம்ம ராமுவுக்குக் கல்யாணம் நிச்சயமாயிட்டதாம். காண்டீனில் ஸ்வீட் காரம் ஆர்டர் பண்ணிட்டான். கிளம்பு.'' இடைவேளையில் நண்பன் கூப்பிட்டான்.

''ஐம் ஸாரி. நீங்க போங்க.'' மலர்ச்சியோடு சொல்ல முயன்ருன். குரலில் சிறிது எரிச்சல் தலைகாட்டிற்று.

மேசைக்கு வழக்கம் போல் டீ வந்தது. அதை அவனைப் பார்க்க வந்திருந்த பார்ட்டிக்குக் கொடுத்து உபசரித்தான்.

''டிபனுக்கு என் ஒய்ஃப் புது மாதிரியா என்னவோ பண்ணியிருக்கா. இது எதுலே செஞ்சதுன்னு கண்டுபிடித்துச் சொல்லேன்.'' அக்கௌண்டண்ட் ஏதோ பலகாரத்தை நீட்டினர்.

''எதுவாய் இருந்தால் என்ன? பிடிச்சிருந்தா சாப்பிடுங்களேன்,'' என்று முகத்தைத் திருப்பிக் கொண்டான் கடுகடுப்புடன்.

ஐந்து மணிக்கு அவன் மகள் மீனு மேசையண்டை வந்து கண்ணைக் கசக்கிக் கொண்டு நின்ருள். இதுவரை அவனைத் தேடி வராத கான்வெண்ட் சிறுமி.

அவனுக்குக் குழப்பம். அதிர்ச்சி. ''என்ன மீனு திடீர்னு? ஸ்கூல் விட்டாச்சில்ல? ஏன் வீட்டுக்குப் போகாம?''

''அரை நாள்தான் ஸ்கூல். ரிக்ஷா மேன் வரலே டாடி.''



''பொறுப்பில்லாத கழுதைகள். இந்த ரிக்ஷாக்காரனை நம்பினுல் இந்தக் கதியா? வரட்டும் ராஸ்கல்!'' கறுவிக் கொண்டான்.

வழியில் ரிக்ஷா ஸ்டாண்டில் அவனுடைய ரிக்ஷாக்காரன் கண்ணில் பட்டான். ''நீயெல்லாம் என்ன ஜன்மத்திலே சேர்த்தி? நீ குழந்தையை அழைச்சுப் போக வரவே இல்லையாமே! ஆபீசுக்கு அது வந்து... எனக்கு அனுவசிய உபத்திரவம். என்ன ஆச்சு உனக்கு?''

''சார், என் சர்வீசிலே ஒரு நாள் தவறியிருக்கிறேனு? மத்தியானம் ஒரு ஆக்ஸிடெண்ட். இத பாருங்க,'' என்று முண்டாவிலும் முதுகிலும் சிராய்ப்பைக் காட்டி, ''அது போலீஸ் கேஸாய்ப் போய்... இப்பத்தான்...'' என்று தொடர்ந்து விவரித்ததைக் கேட்கச் சேகர் அங்கு நிற்கவில்லை.

இரவு படுக்கையில் விழுந்த போது அவன் மனம் நிம்மதி இழந்து தவித்தது. நினைத்துப் பார்த்தபோது அன்று முழுவதுமே அவன் மனிதத் தன்மையில்லாமல்தானே நடந்து கொண்டான்?

எல்லோரையும் போல் சாதாரணமானவனுய் இரக்கத்தோடு, மனுஷத்தனத்தோடு இருந்தால் போதும். விரதம் நமக்குச் சரிப்படாது என்று தீர்மானித்துக் கொண்டான்.

ராஷ்மி



# எப்படி?

புது வீடு எனக்கும் வள்ளிக்கும் மிகவும் பிடித்து விட்டது. வாடகை வீடு தான். ஆனாலும் இரண்டே குடித்தனங்கள். நாங்கள் ஒன்று. பக்கத்தில் இன்னொரு குடும்பம். அவர்கள் கணவன், மனைவி, பள்ளிக்கூடம் போகும் சின்னப் பையன். மூன்றே பேர்.

வள்ளி அலுவலகம் சென்று விட்டாள். சனிக்கிழமை எப்போதும் எனக்கு விடுமுறை.

ஒரு புத்தகத்துடன் சாய்வு நாற்காலியில் சாய்ந்தேன். ரேடியோ சத்தத்தைக் குறைத்துவிட்டுப் படிக்க ஆரம்பித்தேன்.

திடீரென்று பெண் குரல் கேட்டது. பக்கத்துப் போர்ஷன்காரியுடையது.

''என்னங்க, கலர் டி.வி. வந்துடுச்சா?''

''இன்னும் வரலே.'' இது அந்தப் பெண்ணின் கணவர்.

சிறிது நேரம் சென்றது.

''கமலா, கலர் டி.வி. வந்தாச்சு.''

''சரிங்க. குளிச்சு முடிச்சிட்டேன். மிக்ஸியும், வாஷிங் மெஷினும் வந்ததும் சொல்லுங்க.''

''சரி.''

அமைதி ஒரு பத்து பக்கங்கள் படித்திருப்பேன். மீண்டும் கணவனின் குரல் காதில் விழுந்தது.

''கமலா, மிக்ஸி, வாஷிங் மெஷின் ரெண்டும் வந்துடுச்சு.''

''இதோ வந்துட்டேன்.''

வள்ளியும் ஒரு கறுப்பு வெள்ளை டி.வி. வாங்க வேண்டும் என்று சொன்னது ஞாபகம் வந்தது. அடுத்த மாதம் கண்டிப்பாக வாங்கி விடவேண்டும். பக்கத்துப் போர்ஷனில் கலர் டி.வி. இருக்கும்போது, நம் வீட்டில் கறுப்பு வெள்ளை டி.வி. கூட இல்லாவிட்டால் நன்றாயிருக்குமா?

அன்று மாலை வள்ளி அலுவலகம் விட்டு வந்ததும் என் முடிவைச் சொன்னேன். அவள் சிரித்தாள்.

''ஏன்? ஏன் சிரிக்கிறே?'' என்று கேட்டேன் சற்றுக் குழப்பத்துடன்.

வள்ளி சொன்னாள்: ''பக்கத்து வீட்டுல ரெண்டு பேரும் வேலைக்குப் போறவங்க. கெடிகாரம் அவங்க வீட்டிலே இல்லே. அதனாலே நேரத்துக்கு வேலைக்குப் புறப்பட டிரான்சிஸ்டர்தான் வழிகாட்டி. நீங்க சொன்ன டி.வி., மிக்ஸி, வாஷிங் மெஷின் இதெல்லாம் அதுல வர்ற விளம்பரங்கள். டி.வி., விளம்பரம் வந்தா மணி ஒன்பது; மிக்ஸி விளம்பரம், ஒன்பதே கால்; ஒன்பது இருபதுக்கு வாஷிங் மெஷின் விளம்பரம் வந்ததும் கிளம்பினா அந்தம்மா ஒன்பதரை பஸ்ஸைப் பிடிச்சு, பத்து மணி ஆபீசுக்குக் கரெக்டா போயிடுவாங்க. இந்தம்மா வீட்டு வேலை பார்க்கும் போது அவங்க வீட்டுக்காரர் இந்த விளம்பரம் வந்தாச்சுன்னு ஞாபகப்படுத்துவாரு. அவ்வளவுதான்.''

இரா. கணேசன்



# அவனுக்கும் கொஞ்சம்

கண்ணுசாமி வேலையில் சேரும் போதே சைக்கிள் கண்டிராக்டர் எச்சரிக்கை செய்துவிட்டார்.

''இதோ பாரப்பா, காலை ஏழு மணி முதல் சாயந்தரம் ஆறு மணிவரை நீ இங்கே சைக்கிள் ஸ்டாண்டிலேயேதான் நின்னிட்டிருக்கணும். சாப்பாட்டுக்குக் கீப்பாட்டுக்கெல்லாம் போக முடியாது. என்ன?''

''சரிங்க,'' என்று கண்ணுசாமி ஒப்புக்கொண்டு விட்டான். கண்டிராக்டர் சொன்ன மாதிரியே சைக்கிள் வந்து கொண்டேதான் இருந்தன. அது ஒரு பெரிய ஆஸ்பத்திரி. விஸிட்டிங் நேரத்தில் மட்டுமல்லாமல் எந்த நேரமும் ஜேஜேதான். மதியச் சாப்பாட்டுக்குக் கொஞ்சமும் நேரமில்லாமல் கண்ணுசாமி தவித்தான். சாயந்தரம் எப்போதடா கண்டிராக்டர் வந்து கணக்கைப் பெற்றுக் கொள்வார் என்று காத்திருப்பான்.

இத்தனைக்கும் அவன் அம்மா பாவம், அலுமினிய டப்பாவில் பழைய சோறும் ஊறுகாயும் வைத்துக் கொடுத்துக் கொண்டுதான் இருந்தாள். எவரும் சைக்கிளில் வராத நேரத்தில் இரண்டு கவளம் அள்ளிப் போட்டுக்கொள்வான்.

பெரும்பாலான நாட்களில், வெராந்தா தூணின் மேற் பகுதியில் அந்த அலுமினிய டப்பா அப்படியே தூங்கிக் கொண்டிருக்கும்.

வேலையில் சேர்ந்த பதினைந்தாம் நாள் அவனுக்கு ஒரு துணை அகப்பட்டது. அவள் பெயர் செல்லம்மா. இருபது வயதிருக்கும்.

''யாரம்மா நீ?'' என்று ஒரு நாள் பேச்சுக் கொடுத்தான் கண்ணுசாமி.

''இதற்கு முன்னாலே இங்கே சைக்கிள் கண்டிராக்டு எடுத்தவரண்டை வேலையில் இருந்தேனுங்க,'' என்றாள்.

இரண்டு மூன்று நாள் பழக்கமான பின், ''யாராச்சும் வந்தாங்கன்னா டோக்கன் கொடு. துட்டு கொடுத்தாங்கன்னா வாங்கி வச்சிக்க. அஞ்சு நிமிசத்திலே அள்ளிப் போட்டுக்கினு வந்திடறேன்,'' என்று அவளை நிற்கச் சொல்லிவிட்டுப் போனான்.

சாப்பிட்டுக்கொண்டிருந்தாலும், தூரத்தில் அவள் நிற்பதையே பார்த்துக்கொண்டிருப்பான்.

பிறகு, அவள் மீது பரிதாபம் ஏற்படலாயிற்று. ''பாவம், சோறு கொஞ்சம் மிஞ்சினால் அதைத் தின்னச் சொல்லலாம்,'' என்று நினைத்தான்.

ஆனால் டப்பாவில் இருக்கிற மோர் சோறு அவனுக்கே போதும் போதாதுமாய் இருந்தது. தினம் தினம் நினைத்துக்கொண்டு, தினம் தினம் டப்பாவைத் தானே காலி செய்து வந்தான்.

கடைசியில் ஒரு நாள் அவனுக்கே வெட்கமாகிவிட்டது. ''செல்லம்மா... வந்து... நான் சாப்பிட்டது போகக் கொஞ்சம் உனக்குத் தரணுமின்னு தினம் தினம் நினைச்சுக்கிறேன். தினம் தினம் எனக்கே—போறாமல் போயிடுது,'' என்று தலையைக் குனிந்துகொண்டு சொன்னான்.

செல்லம்மாவின் கண்களிலிருந்து கடகடவென்று கண்ணீர் உருண்டது. ''கண்ணுசாமி, ஏன் உனக்குச் சோறு போறாமல் போகுது தெரியுமா?''

''ஏன்?''

''நீ வெராண்டா தூண் மீது வைச்சிட்டுப் போறியில்லே? டப்பாவைத் திறந்து உனக்கு முன்னே நான் கொஞ்சம் தின்னுடறேன். அதான். என்னை மன்னிச்சிடு கண்ணுசாமி.''

கண்ணுசாமி அவளை முறைத்தான். பிறகு கடகடவென்று சிரித்தான்.

பாப்பா ரகு




எத்தனை காலமாய் நடித்துக் கொண்டு வருகிறார் இந்த மணிசேகர்! அன்று பார்த்த கண்ணுக்கு அழிவில்லாமல் இருக்கிறாரே! திரையுலகில் எவர்கிரீன் ஸ்டார் என்று அவருக்குப் பெயர்.

கொஞ்ச காலமாய்ப் புதுமுகங்களின் படையெடுப்பினால் அவருக்கு மவுசு கொஞ்சம் குறைந்து போய்விட்டதை மறுக்க முடியாது.

அன்று மணிசேகரை வைத்து வெற்றிப் படம் தயாரித்த பழைய படாதிபதி ஒருவர் அதே பழைய விசுவாசத்தில் தன் புதிய தயாரிப்புக்கு அவரைப் போட்டிருந்தார். அதுபற்றிப் பேசுவதற்காக அன்று அவருடைய வீட்டில் சந்தித்தார்.

''மணிசேகர் சார், இந்தப் படத்தில் நீங்கள் இழந்த வாய்ப்பை யெல்லாம் திரும்பப் பெறுவீர்கள் என்று நம்பிக்கையிருக்கிறது. வளர்ந்து வரும் புதுமுகம் ஒன்றைக் கதாநாயகியாய்ப் போட்டிருக்கிறேன்.''

''புதுமுகமா? யார் சார்?''

''நீங்களும் பார்த்திருப்பீர்கள். 'புயலிலே ஒரு பூ' படத்தில் செகண்ட் ஹீரோயினாய் நடித்ததே சாயா, அது தான்.''

''சாயா!'' அவர் முகம் கறுத்தது. ''மன்னியுங்கள் சார். வேறு ஹீரோ புக் பண்ணிக் கொள்ளுங்கள்.''

மணிசேகர் தன் முடிவில் தீர்மானமாக இருக்கவே வந்த அவர் எழுந்து சென்றுவிட்டார்.

நாடக நடிகராயிருந்து துணை நடிகராய்ப் படவுலகில் அடியெடுத்து வைத்தவர் மணிசேகர். அவருக்கு ஜோடியாய் அவ்வப்போது கைகொடுத்த வசந்தா அவருடன் நெருங்கி வந்தாள். வாழ்க்கையிலும் ஜோடி சேர்ந்தாள். ஒரு பெண் குழந்தையும் பிறந்தது. இருவருமே துணை நடிகர்களாக இருந்தவரை வாழ்க்கை சுமுகமாகத்தான் இருந்தது. ஆனால் மணிசேகரை மட்டும் ஒரு படத்தில் கதாநாயக அந்தஸ்துக்கு உயர்த்திய போது, அவரும் தன் வித்தையையெல்லாம் காட்டிப் படிப்படியாய் உயர்ந்தபோது வசந்தாவின் மனத்தில் ஒரு பள்ளம் விழுந்தது. தனக்குக் கதாநாயகியாய் வர வாய்ப்பிருந்தும் அதைக் கணவனே கெடுக்கிறான் என்று அவளுக்குள் ஒரு கற்பனையான எண்ணம். குடும்ப நிம்மதியையே குலைத்துக் கொண்டிருந்தாள்.

பொறுக்க முடியாமல் கடைசியில் அவளிடமிருந்து தன்னை விடுவித்துக் கொண்டுவிட்டார் மணிசேகர். விவாகம் என்று ஒன்று பேருக்கு நடந்திருந்ததால் பின்னால் ஏதும் வில்லங்கம் வரக்கூடாது என்பதற்காக அவளை முறைப்படி விவாகரத்து செய்து விட்டார்.

விவாக ரத்துப் பெற்றபோது வசந்தா அவரிடம், ''என்னிடமிருந்து விவாகரத்து வாங்கி விட்டீர்கள் இல்லையா? ஒரு நாள் இல்லாவிட்டால் ஒரு நாள் நான் இதற்குப் பழி வாங்கவில்லை, நான் உங்களோடு வாழ்ந்தவள் இல்லை,'' என்று ஆங்காரமாய்ச் சொல்லிவிட்டுப் போனாள்.

காத்திருந்து இப்போது பழி வாங்கிவிட்டாள். தகப்பனுக்கே காதலியாய், மனைவியாய், நடிக்கப் பெண்ணை அனுப்பியிருக்கிறாள் கிராதகி. கோர்ட்டார் தீர்ப்புப்படி எந்த மகளை, அவளிடம் மணிசேகர் ஒப்படைத்தாரோ அதே மகள்தான் 'சாயா'.

'தருமன்'

# ஈரமான ரோஜா



''ஏய்! இந்தத் தலையணையிலேயே ஒரே போடு!'' என்று அவளை இடுப்பில் அழுத்தித் தன் பக்கமாகப் புரட்டிக்கொண்டான் ''ப்ளீஸ்! எங்கே வைச்சிருக்கிறே, சொல்லு. நானே எடுத்துக்கறேன். நீ எழுந்திருக்கக் கூட வேண்டாம்.''

அர்ஜுன் தன் தலைமாட்டினருகே வாய்மூடி மௌனியாகக் கிடந்த டிரான்ஸிஸ்டரைப் பரிதாபமாய்ப் பார்த்தான்.

விஷயம் வேறொன்றுமில்லை. தூங்கப் போகுமுன், டிரான்ஸிஸ்டரில் பாட்டுக் கேட்க வேண்டும் அவனுக்கு. பத்தரையிலிருந்து பதினொரு மணி வரை சினிமாப் பாட்டுக் கேட்காவிட்டால் மண்டை வெடித்துவிடும். பல நாட்கள், டிரான்ஸிஸ்டரை அணைக்காமலே கூடத் தூங்கி விடுவான்.

சந்திராவுக்கு அது கொஞ்சம் கூடப் பிடிப்பதில்லை.

இன்று அவன் பழக்கம் போல் டிரான்ஸிஸ்டரை 'ஆன்' செய்தபோது ஒரு சத்தத்தையும் காணோம். சில நிமிடங்களில் புரிந்துவிட்டது. திறந்து பார்த்தான். செல்களே இல்லை!

சந்திரா அவைகளைக் கழற்றி ஒளித்து வைத்துவிட்டாள்! என்ன கெஞ்சியும் கொடுக்கவில்லை.

'வீல்!' என்று சந்திரா அலறினாள். சரேலென்று படுக்கையில் எழுந்து உட்கார்ந்தாள்.

''என்னங்க... என் சங்கிலி...'' என்று கழுத்தைத் தொட்டுப் பார்த்தபடி மிரள மிரள விழித்தாள்.

எப்போதும் அவள் அணிந்திருக்கும் இரண்டு பவுன் சங்கிலியைக் கழுத்தில் காணோம்!

''சாயந்தரம் குழாய்கிட்டே அதைச் சோப்புப் போட்டு அலம்பினேன்... அப்புறம் எங்கே வைச்சேன்னு நினைவில்லையே...'' பதற்றத்துடன் எழுந்து வெளியே ஓடினாள்.

அர்ஜுனும் பதைத்துவிட்டான்.

ஏறத்தாழ நாலாயிரம் ரூபாய் பெறுமானமுள்ள சங்கிலி!

இரண்டு பேருமாய் வீடு பூரா விளக்கைப் போட்டுக் கொண்டு தேடினார்கள். ஊகூம்!

கண் கலங்கப் படுக்கை அறைக்குத் திரும்பினாள் சந்திரா.

அர்ஜுனுக்குக் கோபமாய் வந்தது. ''என்னை அழ வைச்சேயில்லே! கடவுள் உன்னை அழ வைச்சிட்டார்!'' என்றான்.

''என்னை ஒண்ணும் குத்திக் காட்ட வேண்டாம்!'' என்று சீறியவள், தலையணைக்கடியிலிருந்து டிரான்ஸிஸ்டர் செல்களை எடுத்து அவன்மீது எறிந்தாள்.

''கடவுள் உன்னை மன்னிச்சிடுவார். நாளைக்குக் கிடைச்சிடும் பார்,'' என்றவாறு அவன் செல்களைப் போட்டு, டிரான்ஸிஸ்டரை ஆன் செய்தான்.

'ஈரமான ரோஜாவே...' என்று பாட்டு ஆரம்பித்தது.

'ஆ!' என்று ஏதோ திடீர் ஞாபகம் வந்தவளாகச் சந்திரா மறுபடி வெளியே ஓடினாள். ஐந்து நிமிடத்துக்கெல்லாம் முகம் மலர, கழுத்தில் சங்கிலி மின்னத் திரும்பி வந்தாள்.

''அந்தப் பாட்டைக் கேட்டதுமே ஞாபகம் வந்தது. குழாய் கிட்டே ரோஜாத் தொட்டிகளை நகர்த்தி வைச்சேன். அப்ப ஒரு தொட்டி மேலே சங்கிலியை வைச்சோம்னு ஞாபகம் வந்தது...'' என்றாள்.

''இனிமேல் ஐயா ராத்திரி பன்னிரண்டு மணி வரை பாட்டுக் கேட்டாலும் மூச்சு விடக் கூடாது!'' என்று சொல்லி இளம் மனைவியை இதமாக அணைத்துக் கொண்டான் அர்ஜுன்.



# கலெக்டரிடமிருந்து வந்த கடிதம்

கனகசபை தன் மகனிடமிருந்து வந்திருந்த கடிதத்தை ஆர்வமாகப் பிரித்தார். 'சே! இந்தக் கடவையும் அப்படியேதானு!' என்று கோபம் வந்தது.

அவர் பிள்ளை பிரகாஷ் உ.பி.யில் உள்ள ஒரு மாவட்டத்தில் கலெக்டராக நியமிக்கப்பட்டுப் பதவி ஏற்ற பிறகு பல கடிதங்கள் எழுதிவிட்டான்.

உ.பி. மக்களைப் பற்றியும் இந்தி மொழி பற்றியும், தான் சின்ன வயதிலிருந்து இந்தி படித்து வந்ததால் மொழித் திண்டாட்டம் இல்லாமல் இருப்பது குறித்தும், உ.பி. உணவு வகைகள் குறித்தும் — இன்னும் பல விஷயங்கள் குறித்தும் எழுதியிருந்தான்.

எல்லாம் சரிதான். ஆனுல்—

''என்னங்க, பிள்ளை எழுதியிருக்கிறுனு?'' என்றபடி உள்ளேயிருந்து வந்தாள் அவர் மனைவி. 'ஊம், ஊம்' என்றவர் அவளிடம் கடிதத்தைத் தந்தார். அவள் மகிழ்ச்சியுடன் படித்துக் கொண்டே திரும்பிச் சென்றுள்.

'ஹூம்! கலெக்டராம் கலெக்டர்! என்ன பிள்ளை இவன்!' என்று கனகசபை முணுமுணுத்துக் கொண்டார்.

மகனது கடிதம் தமிழில் எழுதியிருந்தது அவருடைய பெரிய மனக் குறை

கனகசபை பெரிய உத்தியோகத்தில் இருந்து ஓய்வு பெற்றவர். மகன் ஜம்மென்று ஆங்கிலத்தில் எழுத வேண்டுமென்று எதிர்பார்த்தார்.

'இவனை ஐ.ஏ.எஸ். படிக்க வைச்சுக் கலெக்டராக்கினுலும் என்ன; பட்டிக்காட்டான் மாதிரி தமிழ்லே கடுதாசு எழுதருன்!' என்று பிள்ளையை நினைத்துச் சிடுசிடுத்தார்.

மாதம் இரண்டு கடிதங்கள் வீதம் பிரகாஷிடமிருந்து ஏழெட்டுக் கடிதம் வந்துவிட்டன.

எல்லாம் தமிழிலேயே வந்தன.

பிரகாஷ் லீவில் ஊர் திரும்பினுன்.

கனகசபையும் அன்னமும் மகனிடம் ஒரு வருடப் பிரிவிற்குப் பிறகு பசி நேரம் வந்ததுகூடத் தெரியாமல் பேசிக்கொண்டிருந்தார்கள்.

''வாப்பா பிரகாஷ், சாப்பிடலாம்.'' அன்னம் அன்பொழுகக் கூப்பிட்டாள்.

''அம்மா, உங்களையெல்லாம் பார்த்ததிலே பசியே இல்லை. காப்பி கொஞ்சம் கொண்டாங்க,'' என்று பிரகாஷ் கூறவே, அன்னம் சமையலறைப் பக்கம் போனுள்.

கனகசபை தனது ஒரு வருட ஆதங்கத்தைப் பிரகாஷிடம் விவரித்தார்.

''பிரகாஷ், என்னப்பா நீ! ஐ.ஏ.எஸ். படிச்சு ஜம்முனு பாஸ் பண்ணியிருக்கே. பெரிய கலெக்டர் ஆனு உன் லெட்டர்லே நீ இன்னமும் தமிழிலேயே எழுதறே. இங்கிலீஷ் மறந்து போச்சா? இனிமே உன் கடிதங்களை இங்கிலீஷ்லேயே எழுது...''

''முடியாதுப்பா.'' பிரகாஷ் மறுதலித்தான்.

''ஏன்? ஏன்?'' திகைத்தார் தந்தை.

''நான் கடிதம் எழுதுவது உங்களுக்காக மட்டும் இல்லேப்பா.''

''என்னது?''

''அம்மாவுக்காகத்தான் அப்படி எழுதறேன். அவங்களுக்குத் தமிழ் மட்டும் தான் தெரியும். நான் இங்கிலீஷில் எழுதினுல் என்னதான் நீங்க படிச்சுச் சொன்னுலும் என் எழுத்தைப் படிச்சால்தானே அம்மாவுக்கு என்னை நேரிலே பார்க்கிற மாதிரி இருக்கும்? அப்பத்தானே அவங்களுக்குச் சந்தோஷம்?''

''உண்மைதாண்டா,'' என்று கனகசபை ஒப்புக் கொண்டார்.

பி. ஆர். பார்த்தசாரதி




ஆர்டரைக் கையில் வாங்கினன் கணேசன்.

அவனுக்கு மனங்கொள்ளாத மகிழ்ச்சி. வெறும் ஆர்டரா இது? மாற்றல் ஆர்டர் ஆயிற்றே!

இரண்டு வருடங்களாய் அலைந்ததில் கிடைத்த அவல் பாயசம் அல்லவா இது?

சென்னைக்கும் திருத்தணிக்குமாக அவனைப் பந்தாடியது மின்வாரியம். முதலில் சென்னையில் உத்தியோகம். வீடு தேனும்பேட்டை.

எண்ணி ஆறு மாதங்களுக்குப் பிறகு திடீரென்று திருத்தணிக்கு மாற்றப்பட்டான். இதனால் தேனும்பேட்டை—சென்ட்ரல் ஸ்டேஷன்—திருத்தணி என்று ஓடிந்து போனான்.

அதிகாலையில் ஐந்து மணிக்கே கணேசன் எழுந்தால், அவன் மனைவி திலகம் நான்கு மணிக்கு எழுந்து விடுவாள். டிபனும் சாப்பாடும் தயாரித்துக் கணவனை உரிய நேரத்தில் அனுப்பி வைப்பாள்.

கணேசன் இரவு ஒன்பதரை மணிக்கு மேல் வீடு திரும்பும்போது சுடச் சுடச் சோற்றைப் போடுவாள்.

இப்படித் திலகம் உழவு மாடாய் உழைத்தவள்தான், அலுத்துக் களைத்துப் போனவள்தான். எப்படியோ கணேசனுக்குத் திரும்பவும் சென்னையில்—அதுவும் பாண்டிபஜார் மின்வாரியப் பிரிவில் மாற்றல் கிடைத்தது.

திருத்தணிக்குப் போய் வரும் போது அவனால் எந்த வேலையையும் பார்க்க முடியவில்லை.

ஆறு நாள் பட்ட அவஸ்தைகளுக்கு ஓய்வு தினமாக ஞாயிற்றுக் கிழமையை அவன் எடுத்துக் கொண்டதால் திலகத்தையோ பிள்ளைகளையோ சினிமா நாடகம், கச்சேரி, பொருட்காட்சி, கடற்கரை என்று அழைத்துப் போகவே இயலவில்லை. உடம்பில் தெம்பு இருந்தால் தானே?

இதில் மனைவிக்கும் பிள்ளைகளுக்கும் நிரம்பவும் சலிப்பு, மனக்குறை. கணேசன் மீது எரிச்சல்.

தனக்கு மீண்டும் சென்னை கிடைத்து விட்ட நல்ல செய்தியைத் திலகம் கேள்விப்பட்டால் எப்படித் துள்ளிக் குதிப்பாள் என்று கணேசன் நினைத்துப் பார்த்தான்.

அவனுக்கு உற்சாகம் பிடிபடவில்லை.

திருத்தணியிலிருந்து பறந்து வந்தான். சாயந்தரம் ஐந்து மணிக்கே வீட்டு வாசலை மிதிக்கும் கணவனைக் கண்டு திருமதி கணேசன் திகைத்தாள். ஒன்றும் புரியாமல் அவனைப் பார்த்தாள்.

அவன் அவளிடம் ஆர்டரை நீட்டினான். அவள் வாங்கிப் படித்தாள். அவன் கம்பீரமாய் மனைவி முகத்தைப் பார்த்துக் கொண்டிருந்தான்.

கொஞ்ச நேரம் நகர்ந்தது.

எதுவும் பேசாமல் மௌனமாகத் திலகம் மாற்றல் ஆர்டரைக் கணேசனிடம் கொடுத்தாள்.

அவனுக்குப் பொசுக்கென்று போய் விட்டது. அதை அவன் எதிர்பார்க்கவில்லை.

''என்னடி பேசாம நிக்கறே?'' அதற்கு மேல் பொறுக்க மாட்டாமல் அவன் கேட்டான்.

திலகம் சலிப்புடன் சொன்னாள்; ''காலைல ஆறு மணிக்குள்ள உங்களை சென்ட்ரலுக்கு அனுப்பிடுவேன். அவ்வளவுதான் வேலை எனக்கு. பிறகு ராத்திரி எட்டு மணிக்கு மேலே தான் வேலை இருக்கும். பகல் பூரா நிறைய ரெஸ்ட் கிடைக்கும். இனிமே மத்தியான சாப்பாட்டை பறந்து பறந்தில்லே சமைக்கணும்?''

அவன் அதிர்ந்து போய் நின்றான்.

ப.மு. இளங்குமரன்



# மணம்

திண்ணையின்மீது அமர்ந்து வம்பளத்துகொண்டிருந்த செண்பகத்தின் பார்வை தெருக் கோடிக்குப் போயிற்று.

பேத்தி சகுந்தலா பூ விற்பவனிடம் பேரம் பேசிக்கொண்டிருந்தாள்.

''போய்ட்டாளா? பூ விற்கிற வாசனை இவளைப் புழக்கடையிலிருந்தே கூட்டியாந்திருமே,'' என்று பொரிந்தாள் செண்பகம்.

''அம்பது காசு குடு ஆச்சி. பூ வாங்கியிருக்கேன்'' என்றபடி, தான் வாங்கி வந்திருந்த பிச்சி மலர்ச் சரத்தை ஆசையுடன் மோந்து கொண்டாள் சகுந்தலா.

''காசோட அருமை தெரியுதா கழுதைக்கு. அம்பது காசுப் பூவும் அரை மணியிலே வாடிப் போயிடும். தூக்கி எறிய வேண்டியதுதான். காசு என்ன விளையுதா? நாலணாவுக்குப் போறும்டி. உன்னோட பெரிய தொல்லையால்ல போச்சு. கல்யாணம் பண்ணப் போறவனோட சம்பாத்தியம் உனக்குப் பூ வாங்கித் தரவே சரியாயிடும் போல இருக்கே.'' ஐம்பது காசை எடுத்துக் கொடுத்தாள்.

அதைப் பெற்றுக்கொண்ட சகுந்தலா ஒரு சிட்டுப் போல விரைந்தாள்.

''நாளைக்கே குடும்பத்தைச் சுமக்க வேண்டிய பொண்ணு, இப்படி விளையாட்டுத் தனமாய் இருக்காளே! பணம் காசோட அருமை தெரியலையே'' என்று அலுத்துக்கொண்டாள் செண்பகம் வேடிக்கை பார்த்துக்கொண்டிருக்க பக்கத்து வீட்டு நாகம்மணியம்மாளிடம்.

சொல்லி வைத்தது போன்று சகுந்தலாவிற்குப் பூந்தோட்டம் வைத்திருந்த மாப்பிள்ளையே அமைந்தான். நாகர் கோவிலுவில் ஒரு கடையில் வேலை. சொந்தமாய் ஒரு பிச்சிமலர்த் தோட்டம்.

''இனிமே இவ நம்ம ஊருக்கு வர்றப்ப எல்லாம் தலைநிறையப் பிச்சிப்பூ வச்சுக்கிட்டுதான் வருவா,'' என்று சிரித்தாள் தோழி.

சகுந்தலாவுக்குத் திருமணமாகிக் கணவன் வீட்டுக்குப் போய்ப் பல மாதங்கள் கழித்து பிறந்த வீடு வருகிறாள். அனைவரும் சகுந்தலா கொண்டு வரப் போகும் பூவைச் சூட ஆயத்தமாய் இருந்தனர். சகுந்தலா வந்துவிட்டாள்.

அனைவரின் பார்வையும் அவளின் தலைக்கே ஓடிற்று.

அட, இதென்ன?

ஒரு சிறிய எலுமிச்சம் பழத்தின் அளவுதான் பிச்சிப் பூப்பந்து அவளின் தலையில் வீற்றிருந்தது.

ஒரு சிநேகிதிக்குப் பொறுக்கவில்லை.

கேட்டாள்.

''ஏண்டி பூந் தோட்டக்காரி! பூவெல்லாம் என்னடி ஆச்சு? இத்தனூண்டு வ்ச்சுக்கிட்டு வந்திருக்கியே!''

''இன்னிக்கு முகூர்த்த நாளாச்சே! பிச்சி அரும்பு படி பன்னிரண்டு ரூபாய். அரை மணியிலே வாடிப் போற பூவை, நாம வெச்சு என்ன ஆகப் போகுது? விற்றால் காசாவது சேரும். அதான் வச்சுக்கிட்டேன்'' என்றாள் சகுந்தலா நிதானமுடன்.

—உமா கல்யாணி




பழங்களும் பூவும் நிறைந்த கூடையைக் கொடுத்து, ''ராதா சர்க்கஸ் கம்பெனியின் பெயருக்கு அர்ச்சனை செய்யுங்கள்.'' என்றாள் சங்கரி.

''என்ன பெயருக்கு?'' என்று குருக்கள் திகைத்தார். அவரும் ஆயிரக் கணக்கில் அர்ச்சனை பண்ணியிருக்கிறார். இந்த மாதிரியான பெயரில் பண்ணும்படி எவரும் சொன்னது கிடையாது.

''ராதா சர்க்கஸ் கம்பெனி,'' என்று மறுபடியும் அழுத்தமாகவே சொன்னாள் சங்கரி. சொல்லிவிட்டு, கீழே நின்றிருந்த குழந்தை பாலுவைத் தூக்கி இடுப்பில் எடுத்து வைத்துக்கொண்டு, ''அம்பாளைப் பார். கன்னத்தில் போட்டுக்க,'' என்றாள்.

குருக்கள் திகைப்பு நீங்காதவராக அர்ச்சனை செய்யத் தொடங்கினார். அதற்கு இணையாகச் சொல்லுவது போல் சங்கரியும், ''அம்மா தாயே. அந்த ராதா சர்க்கஸ் கம்பெனிக்காரங்க எந்த ஊருக்குப் போனாலும், எங்கே இருந்தாலும் நல்லாயிருக்கணும்,'' என்று பிரார்த்தனை செய்து கொண்டாள்.

குழந்தை பாலு இடுப்பில் கனமாக இருப்பதை உணர்ந்தபோது நன்றியினால் அவள் கண்கள் பனித்தன. மூன்று மாதத்துக்கு முன்பு குழந்தை இப்படியா இருந்தான்? பஞ்சைத் தூக்குகிற மாதிரி வெகு லேசாக, எலும்பும் தோலுமாக அல்லவா இருந்தான்? பரிசோதித்த டாக்டர், ''உடம்பு ஒன்றுமில்லை. நன்றாய்ச் சாதம் போடுங்கள். ஆகாரம் கொடுங்கள்,'' என்றார்.

''சாப்பிடவே மாட்டேன் என்கிறான், டாக்டர். ரொம்ப அடம் பிடிக்கிறான்,'' என்றாள் அவள்.

''குழந்தைகள் அப்படித்தான் இருக்கும். நீங்கள்தான் வேடிக்கை காட்டி, விளையாட்டுக் காட்டி, எப்படியாவது ஊட்டிவிட வேண்டும்,'' என்றார் டாக்டர்.

அவளும் என்னென்னவோ செய்து பார்த்துவிட்டாள். பருப்பு சாதம் பிசைந்த கிண்ணத்தைக் கொண்டு வந்ததுமே பாலு முரண்டு பண்ணினான். கிண்ணியைத் தட்டிவிட்டான். ''நீங்கள் ஓர் அதட்டல் போடுங்கள்,'' என்று கணவனை அழைத்தாள். ''டேய், இப்ப மரியாதையாய்ச் சாப்பிடப் போறியா, இல்லே, முதுகுத் தோலை உரிக்கட்டுமா?'' என்று மாதவன் சத்தம் போட்டுப் பாலுவை மேலும் வீரிடப் பண்ணினான்.

இந்தச் சமயத்தில்தான் அவள் வீட்டுக்குப் பக்கத்திலிருந்த மைதானத்தில் 'ராதா சர்க்கஸ்' முகாம் போட்டது. விளம்பரத்துக்காக வேண்டி, தினம் ஏழு மணிக்கு அவர்கள் ஒளி விளக்கை வானத்தை நோக்கிப் பாய்ச்சி, அரை வட்டம் அடித்தார்கள்.

''லைட்டு! லைட்டு!'' என்று பாலு அதைக் கண்டு மகிழ்ந்து கை கொட்டிச் சிரித்தான். அதுதான் சமயம் என்று, ''பார்த்தியா! இதோ லைட்டு வருது! அதோ போயிட்டுது! இதோ இந்தக் கோடியில் மறுபடி வரும் பார்,'' என்று விளையாட்டுக் காட்டியபடியே சாதத்தை ஊட்டி விட்டாள் சங்கரி. ஒளி விளக்கு வானத்தில் பாய்கிற அந்தப் பத்து நிமிடத்துக்குள் அவனும் ஒழுங்காகச் சாப்பிட்டு விட்டான்.

இந்த மூன்று மாதத்துக்குள் அவனுடைய உடம்பும் தேறிவிட்டது.

அர்ச்சனையை முடித்துக் கொண்டு சங்கரி வீடு திரும்பினாள்.

இன்று சர்க்கஸ் வேற்றூருக்குப் போய் விடுகிறதே, இனி என்ன செய்வோம் என்று ஒரு கவலை இருந்தது.

ஆனால் வீட்டுக்குள் நுழையும் போதே பாலு, ''அம்மா, பசிக்குதும்மா,'' என்றான்.

ஆம். அவன் இந்த மூன்று மாதத்தில் ஆரோக்கியமான குழந்தையாகி விட்டான்.

'வசுதா'